# தீரன் தியாகி ராஜ்குரு



ஆர். பட்டாபிராமன்

சிறு வெளியீடு  பிப்ரவரி 2020

ஆசிரியரின் பிற நூல்கள்

1. மார்க்சியத் தடங்கள்
2. ரோசாலக்ஸம்பர்க்
3. போராளிகளின் குரல்
4. பகவத்கீதை பன்முகக் குரல்கள்
5. Trade Justice in Telecom
6. Selected Ideas of O.P Gupta
7. ஹெகல் துவங்கி..
8. கார்க்கியின் அரசியல்வெளி
9. நவீன சிந்தனையின் இந்தியப் பன்முகங்கள்
10. காந்தியைக் கண்டுணர்தல்

சிறு வெளியீடுகள் :

1. ஷியாம்ஜி கிருஷ்ண வர்மா
2. சிகாகோ மேதின தியாகிகள்
3. பகுனின் போராட்ட வாழ்வும் அனார்க்கிசமும்
4. விடுதலைக்கு முன்னர் எம் என் ராய்
5. பிரடரிக் எங்கெல்ஸ் நட்பின் சிகரம்
6. நேதாஜி சுபாஷ் கம்யூனிஸ்ட்கள் உறவும் உரசலும்

# தீரன் தியாகி ராஜகுரு

முன்னீடு

சிவராம் ஹரி ராஜகுரு பகத்சிங்குடன் தூக்குமேடை ஏறிய தியாகி. பகத்சிங் ராஜ்குரு சுக்தேவ் என மூவர் பெயரும் பொதுவாக அனைவராலும் உச்சரிக்கப்படுகிறது. பகத்சிங் குறித்து - அவரது ஆளுமை குறித்து ஏராளம் பேசப்பட்டுள்ளது - எழுதப்பட்டுள்ளது - உணரவைக்கப்பட்டுள்ளது. அதே நேரத்தில் ராஜ்குரு, சுக்தேவ் குறித்து போதுமான அளவு பேசப்படவில்லை- எழுதப்படவில்லை.

பகத்சிங் ஆளுமை மேலானது என்பதில் சந்தேகமில்லை. பகத்சிங்கில் அவர்களும் அடக்கம் என்பதுடன் நிற்காது அந்த ஆளுமைகளின் உருவாக்கம் மற்றும் உயரத்தையும் புரிந்துகொள்ள வேண்டும் - அவர்களையும் தேடவேண்டும் என்ற எண்ணத்துடன் வெளிவந்தவை மிகக்குறைவே. தமிழில் ராஜ்குரு குறித்தும், சுக்தேவ் குறித்தும் கொஞ்சமாவது எழுதிப்பார்க்கவேண்டும். பலதரப்புகளிலிருந்து வரலாற்றைத் தேடும் மாணவர்களுக்கு உதவியாக சில பக்கங்களாவது தரவேண்டும் என்ற முயற்சியால் ராஜ்குரு பற்றி படித்தறிந்த செய்திகள் சிறு பிரசுர வடிவில் இங்கு தரப்பட்டுள்ளது.

புரட்சிகர இளைஞர்களாகிய அவர்களின் தேடல்- தெளிவு- விளையாட்டுத்தனம்- பொறுப்பான நகர்வுகள்- தேசபக்தி- தியாகம் செய்வதில் இருந்த போட்டி உணர்வு ஆகியவற்றை ராஜ்குருவின் வாழ்க்கை நிகழ்வுகளின் வழியே வெளிக்கொணர இப்பிரசுரத்தில் முயற்சிக்கப்பட்டுள்ளது. அவர்களின் தியாகம் மெச்சத்தகுந்தது. ஆனால் வழிமுறை விவாதத்திற்குரியது. அது ஒன்றே சரியான முன்மாதிரி என காட்ட முடியுமா- வன்முறை வழிப்பட்ட எதுவும் எதை இறுதி இலக்கு என வைக்கிறதோ அதை அடைந்தவுடன் ஒடுக்குமுறை கருவியாகாமல் இருக்குமா - அகிம்சை வழி ஏற்குமா போன்றவை தீவிர விவாதத்திற்குரியவை. இங்கு ராஜ்குரு வாழ்க்கை அவர்களது தோழர்களுடன் இணைந்து பேசப்பட்டுள்ளது.

2-2-2020 ஆர்.பட்டாபிராமன்

# 1

ராஜ்குரு ஆகஸ்ட் 24 1908ல் கேட் எனும் புனே அருகிலான ஊரில் பிறந்தவர். தாயார் பார்வதி தேவி- தந்தை . ஹரிநாராயண் ராஜ்குரு. பாரம்பரியமான பிராம்மண குடும்பம். ராஜ்குருவிற்கு 6 வயதாகும்போதே தந்தை மரித்தார். சகோதரர் திங்கர் பொறுப்பேற்று குடும்பம் பிழைக்க உழைத்தார். கேட் கிராமத்தில் ஆரம்பக்கல்வி முடித்து புனேவில் ஆங்கில கல்விக்கூடம் ஒன்றில் ராஜ்குரு சேர்க்கப்பட்டார்.

பகத்சிங்குடன் இணைந்து ஜே பி சாண்டர்ஸ் போலீஸ் அதிகாரியை சுட்டுகொன்ற வழக்கில் ராஜ்குருவும் ஒருவர். அவருக்கு அப்போது வயது 20. சக தோழர்கள் பகத்சிங் சுக்தேவ் உடன் அவ்வழக்கின் தீர்ப்பால் தூக்குமேடை ஏறி விடுதலைப்போராட்டத்திற்கு உயிர்பலி கொடுத்தவர். கேட் அவரின் நினைவாக ராஜ்குருநகர் என பெயர் மாற்றம் பெற்றது. அவருடைய பகுதியில் அவருக்கான நினைவகம் ஒன்றும் செயல்பட்டு வருகிறது. டெல்லி பல்கலையுடன் இணைந்த பெண்கள் கல்லூரி ஒன்று ராஜ்குரு பெயரால் இயங்கி வருகிறது.

ஆங்கிலத்தில் தேர்ச்சியில்லை என சகோதரன் தன் மனைவி முன் தண்டனை கொடுத்ததை ராஜ்குருவால் தாங்கிக்கொள்ள இயலவில்லை. தாயார் மளிகை வாங்கக் கொடுத்த பைசாக்களுடன் 16 வயது பையன் வெளியேறினார். அங்கிருந்து வாரணாசி சென்றார். பாரத் சேவா மண்டல் மூலம் பயிற்சி எடுத்துக்கொண்டார். நூலகத்தில் சமஸ்கிருதம், இந்து புராணங்களை படித்தார். மராட்டிய வீரன் சிவாஜி மீதும் அவனது கொரில்லா முறைகள் மீது அளவற்ற ஈர்ப்பு அவரிடம் ஏற்பட்டது. வாரணாசியில்தான் அவர் ஹிந்துஸ்தான் சோசலிஸ்ட் ரிபப்ளிகன் அசோசியேஷன் என்பதுடன் அறிமுகமானார். சுக்தேவ் பகத்சிங் நட்பும் கிட்டியது.

1928 சைமன் கமிஷன் எதிர்ப்பு போராட்ட ஊர்வலத்தில் லாலா லஜ்பத்ராய் போலீசாரால் தாக்கப்பட்டார். இதனால் உடல்நிலை பாதிக்கப்பட்ட அவர் சில நாட்களில் மறைந்தார். இதில் மனக்காயமுற்ற பகத்சிங் தோழர்கள் பழிதீர்க்க விரும்பினர்.

ராஜ்குரு குறிபார்த்து சுடுபவர் என்கிற பெயரை அவரது குழாமில் பெற்றிருந்தார். ஸ்காட் (சாண்டர்ஸ்) துப்பாக்கி சூட்டிற்காக ஆசாத், ராஜ்குரு, பகத்சிங், ஜெயகோபால் பணிக்கப்பட்டிருந்தனர். சாண்டர்சை டிசம்பர் 17 1928ல் போலீஸ் தலைமையகம் அருகிலேயே ராஜ்குருதான் முதலில் சுடுகிறார். இந்நிகழ்விற்கு பின்னர் ராஜ்குரு நாக்பூரில் சென்று தங்குகிறார். ஆர் எஸ் எஸ் வரலாற்றாசிரியர்கள் அவருக்கு நாக்பூரில் ஹெட்கேவர்தான் ஏற்பாடுகளை செய்து கொடுத்ததாக எழுதியுள்ளனர். அவர் திரும்ப பூனா செல்லும்போது கைது செய்யப்படுகிறார்.

மார்ச் 24 1931 காலை 7 மணிக்குதான் தூக்கு தண்டனை என்று இருந்தது. பகத்சிங் ராஜ்குரு சுக்தேவ் ஆகியோருக்கு மரணதண்டனை விதிக்கப்பட்டு மார்ச் 23 1931 இரவு தூக்கிலிடப்படுகின்றனர். பெரோஷாபாத் மாவட்டத்தில் ஹூஷன்வாலா சட்லெஜ் நதிக்கரையில் அவர்கள் எரியூட்டப்பட்டனர்.

மார்ச் 23 தண்டனைக்கு முதல்நாள் உறவினர்கள் சந்திக்க வந்தனர். பகத்சிங்கின் தாத்தா சர்தார் அர்ஜுன் சிங் தந்தை சர்தார் கிஷன் சிங், தாயார் வித்யாவதி, ராஜ்குருவின் தாயார் பார்வதிதேவி, சுக்தேவின் தாயார் ரல்லிதேவி மற்றும் உறவினர் நண்பர்கள் என நூற்றுக்கணக்கானோர் வந்தனர். சிறை அதிகாரிகள் பெற்றோர்க்கு மட்டுமே அனுமதி என வற்புறுத்தினர். பெற்றோர்கள் இந்த நிபந்தனையை ஏற்கமுடியாது என்றனர். இதை அறிந்த கூட்டத்தினர் அரசாங்கத்தை சிறை அதிகாரிகளை கண்டித்தும் புரட்சிக்காரர்களை வாழ்த்தியும் முழக்கமிட்டனர். தேவையற்ற கலகம் வரவேண்டாம் என தங்கள் மனக்குமுறல்களை அடக்கிக்கொண்டு பெற்றோர் உற்றார் புரட்சிகர இளைஞர்களை பார்க்காமலேயே வெளிவந்தனர்.

வழக்கறிஞர் பிரானாத் மேத்தா கொடுத்த லெனின் புத்தகத்தை அன்றைய தினம் பகத்சிங் படித்துக்கொண்டிருந்தார். ராஜ்குரு மிக அமைதியாக இருந்ததாக மேத்தா பார்த்துவிட்டு தெரிவித்தார். சிவ வர்மாவிடம் தனக்கு சாவு குறித்து அச்சம் இல்லை என்றார். ’நமது தியாகம் நம் தேச மக்களுக்கு விடுதலையை கொணரும் என்றால் நாம் வரம் பெற்றவர்கள்தான். மக்கள் நம் பாதையை தேர்ந்தெடுத்தாலும் நாம் வரம் பெற்றவர்கள்தான்’ என்றார் ராஜ்குரு. அன்று பயம் காரணமாக சிறைவாசிகளுடன் கூடுதலாக சிரித்து மகிழ்வதாக ராஜ்குரு காட்டிக்கொள்கிறாரோ என்கிற பேச்சு நடந்தது.

சவரத்தொழிலாளி பர்கத் மூலம் தான் 11 மணிநேரம் முன்னதாக தூக்குநேரம் மாற்றப்படுகிறது என்கிற செய்தி வருகிறது. ஜெயில் வழக்கங்கங்களின்படி மாலையில் தூக்கு போடுவதில்லை என்கிற நடைமுறையை இத்தோழர்கள் தண்டனையில் பிரிட்டிஷ் மீறியது.

கான் பகதூர் முகம்மது அக்பர் சீனியர் ஜெயில் அதிகாரி. அவர் முகக்குறிப்பு எதையும் காட்டாமல் இருந்தார். வழக்கத்திற்கு முன்பாக மாலை 4 மணிக்கே சிறைக்கதவுகள் அடைக்கப்பட்டன. எவரும் நடமாட அனுமதிக்கப்படவில்லை. ஆயுதம் ஏந்திய காவலர் கட்டுப்பாட்டிற்குள் அனைத்தும் வந்தது.

பகத்சிங், ராஜ்குரு, சுக்தேவிற்கு இரவு ஏழுமணிக்கு குளியல் முடித்து கருப்பாடைகள் அணிவிக்கப்பட்டன. மூவரும் எடை பார்க்கப்பட்டனர். எடை கூடியிருந்தது. கைகளை கட்டாதீர் என புரட்சிக்காரர்கள் கோரினார். விதிகளுக்கு புறம்பானது என்றாலும் ஜெயிலர் ஏற்றார். மூவரும் புன்முறுவல் மாறா நிலயில் இருந்தனர். பகத்சிங் நடுவில் இருந்தார். அவர் பாடத்துவங்கினார். இருவரும் சேர்ந்துகொண்டனர். எனது சாம்பல் கூட இம்மண்ணில் முகிழ்ந்து மணம் வீசும் என்பதாக பாடல் சென்றது. மூவரும் இன்குலாப் ஜிந்தாபாத் முழக்கமிட்டனர். ’மாஜிஸ்ட்ரேட் அவர்களே இந்திய புரட்சிக்காரர்கள் எப்படி சாவை தழுவுகிறார்கள் என்பதைக் காணக் கொடுத்து வைத்திருக்கிறீர்கள்’ என்றார் பகத்சிங்.

சிக்னல் கொடுக்கப்பட்டது. ’சாம்ராஜ்யவாத் முர்தாபாத்’, ’இன்குலாப் ஜிந்தாபாத்’, ’வந்தே மாதரம்’ என இறுதியாக தோழர்கள் முழங்கினர். சிறைக்கு வெளியே சர்தார் கிஷன் சிங் பெரும் கூட்டத்தார் மத்தியில் உரையாற்றிக்கொண்டிருந்தார். லஷ்மி இன்ஷ்யூரன்ஸ் நிறுவனம் சார்ந்த பண்டிட் சந்தானம் என்பார் தூக்கு செய்தியை பகத்சிங் தந்தையிடம் தெரிவிக்கிறார். அவர் நிதானம் இழக்காமல் தொடர்ந்து வேதனையை மறைத்து உள்வாங்கிக்கொண்டு பேசுகிறார். அவர்கள் தூக்கிலிடப்பட்டவுடன் தரை கிடத்தப்பட்டு இறந்துவிட்டனர் என்கிற டாக்டர் அறிக்கை பெறப்படுகிறது.

பகத்சிங் தாயார் தனது மகனை மட்டும் கொண்டாடினால் போதாது என்பதை எடுத்து சொல்பவராக இருந்துள்ளார்.. சுக்தேவின் குல்லாயும் ராஜ்குருவின் சோலாப்பூர் காலணிகளும் தனது பகத்சிங்கின்

உடைமைகளுடன் சேர்த்து வைக்கப்படுவதை வித்யாதேவி விரும்பினார். இதை பகத்சிங் உறவினர் ஜக்மோகன் தெரிவிக்கிறார்.

புனேயில் சகான் எனும் கிராமப்பகுதியில் தேஷஷ்தா எனும் பிராம்மண வகுப்பை சார்ந்தவர் பெரியவர் பண்டிட் காசேஸ்வர் பிரம்ஹே. அவர் துக்காராமின் சீடர். விஷ்ணு கோயில் கட்டியவர். அவருக்கு சில மந்திர சக்தி இருப்பதாக ஊர்க்காரர்கள் நம்பினர். அவர் மந்திரங்கள் ஓதினால் மழை வருகிறது என்கிற நம்பிக்கையும் இருந்தது. அப்படி 84 வறட்சி கிராமங்களை அவர் காப்பாற்றினார் என்கிற நல்ல மரியாதை அவருக்கு கிடைத்தது.

சத்திரபதி சிவாஜியின் பேரன் சில சொத்து தகராறுகளை தீர்க்கும் விஷயத்தில் பண்டிட்ஜியை சந்தித்தார். சிவாஜியின் பேரன் பண்டிட்ஜிக்கு ராஜ்குரு என்கிற பட்டம் தருகிறார். அதைத் தொடர்ந்து அவர் வாரிசுகள் ராஜ்குரு என பட்டம் தரித்தனர். பெரியவரும் கேட் என்கிற கிராமத்திற்கு இடம் பெயர்ந்தார். இக்கிராமம் புனேவிலிருந்து 40 மைல் தொலைவில் இருக்கிறது. இவரது வழியில் வந்தவர் ஹரிநாரயண். அவருக்கு இரண்டாவது மனைவியாக வாய்த்தவர் பார்வதி தேவி. இவர்களுக்கு பிறந்த பிள்ளைகள் திங்கர் மற்றும் சிவராம் மற்றும் மூன்று பெண்கள் சந்திர பாகா, வாரினி, கோதாவரி.

தந்தையார் நோய்வாய்ப்பட்டு மரணிக்கிறார். அப்போது திங்கர் 10ஆம் வகுப்பில் இருக்கிறார். சிவராம் ராஜ்குருவிற்கு ஆறுவயது. பின்னர் திங்கர் வருவாய் இலாகாவில் அரசுப்பணி கிடைக்கப்பெற்று சேர்கிறார். தாயார் பார்த்த ஜாதகப்படி ராஜ்குரு பெரும்புகழ் பெறுவார் என கணிக்கப்பட்டது. அண்ணன் ஆங்கில கல்வியை வலியுறுத்தினார். ராஜ்குரு பிரிட்டிஷாருக்கு சேவகம் செய்ய விருப்பமில்லை என எதிர்த்து வாதாடுவார்.

ஒருமுறை விஷ்ணு கோயிலுக்கு ஜகத்குரு சங்கராச்சாரியார் வருகிறார் என அறிந்து பார்க்க சென்றார் ராஜ்குரு. அவரின் உரையில் ஈர்ப்பு ஏற்பட்டது. அவரின் சீடக்கோடியாகவேண்டும் என்கிற விருப்பமும் தலைதூக்கியது. உபவாசமிருப்பது- ஆன்மாவை சுத்தம் செய்துகொள்வது என்கிற பழக்கமும் வந்தது. இப்பழக்கம் பின்நாட்களில் லாகூர் சிறையில் இருமுறை பட்டினிப்போர் நடத்தி வாடியபோது அவருக்கு உதவியாக இருந்தது. ராஜ்குரு சங்கராச்சாரியர் கூடவே செல்லவேண்டும் போல்

இருக்கிறது என பேசத்துவங்கினார். தாயார் மற்றும் அண்ணன் அவரை தடுத்து கவனத்தை மாற்றினர்.

சிறுவயதிலேயே அவருக்கு திலகரிடம் ஈர்ப்பு ஏற்பட்டது. திலகர் அவர்கள் கிராமப்பகுதிக்கு வந்தபோது முதல்வரிசையில் உட்கார்ந்து திலகரின் பேச்சைக்கேட்டார் ராஜ்குரு. மூன்றாவது படிக்கும் அக்குழந்தை திலகர் தங்கியிருந்த இல்லம் சென்று அவரை பார்க்கவேண்டும் என அடம் பிடித்தது. பெரியவர்கள் கேலியாக பார்த்தாலும் திலகர் அக்குழந்தையை அழைத்து மாலையிட்டு கொஞ்சினார். இது போன்ற ராஜ்குருவின் செயல்களால் அரசாங்கப் பணியில் இருக்கும் அண்ணன் எரிச்சலுற்றார். கழுத்தில் மாலையுடன் வந்த தம்பியின் மாலையை தூக்கி எறிந்துவிட்டு ஒழுங்காக படி என்றார். ராஜ்குருவிற்கு நேரும் இத்துன்பங்களைப் பார்த்து தாயார் சங்கடப்பட்டார்.

பிரிட்டிஷ் அதிகாரிகளுக்கு கீழ்ப்படியாத கிராமத்தை சேர்ந்தவர்கள் அடிக்கப்படுவதை பார்த்து கோபமடைந்தார் ராஜ்குரு. புனேவில் குடிபெயர்ந்த அண்ணனுக்கும் தம்பி ராஜ்குருவிற்கும் ஏற்பட்ட விரிசலால் வீட்டைவிட்டு வெளியேறும் சூழல் ராஜ்குருவிற்கு ஏற்பட்டது. அவருக்கு அப்போது வயது 16.

வேட்டி சட்டை குல்லாயுடன் ரூ 1 மற்றும் 16 அணாக்களுடன் அவரது பயணம் துவங்கியது. சகோதரிக்கு இதில் இரண்டு அணா கடன். வழியில் தென்பட்ட பிச்சைக்காரருக்கு 8 பைசா போட்டு அவர் வாழ்த்தை பெற்றார் ராஜ்குரு. இரவு புனே ரயில்வே ஸ்டேஷனில் தங்கினார். எங்கு போவது என்கிற மனப்போராட்டம். சொந்த கிராமத்திற்கு போகலாம் என முடிவெடுக்கிறார். அரை அணாவிற்கு பெற்ற கடலை இரவு உணவானது. ஆனாலும் கிராமத்திற்கு வெளியே கோயிலில் தங்கிவிட்டு ’வர்கே’ எனும் அடுத்த கிராமம் செல்கிறார். வயிற்றுப்பசி- கல்லைக்கட்டிக்கொண்டு ஏமாற்றிக்கொள்கிறார்.

இரவில் பார்த்த கிராமத்தார் சிலர் பேய் எனக் கூச்சலிட பக்கத்தில் மறைந்துகொண்டார் ராஜ்குரு. அங்குள்ள ஆசிரியர் ஒருவரை சந்தித்து பேசுகிறார். உண்ண உணவு வேண்டுகிறார். குருகாணிக்கை தரவும் தயார் என்கிறார். அடுத்து அங்கிருந்து கால்நடையாக இழைதழைகளை தின்று பக்கத்து கிராமங்களுக்கு செல்கிறார். கிராமத்தில் ஒருவர் அவருக்கு உணவளித்து ’தட்சணை’யும் தருகிறார். ஏறக்குறைய 130 கி மீ நடந்து நாசிக்

நகரை அடைகிறார் ராஜ்குரு. அங்கு அன்ன சத்திரம் ஒன்றில் சேர்ந்து பசி ஆற்றிக்கொள்கிறார். அந்நகரிலும் சமஸ்கிருதம் பயில்கிறார்.

உணவிற்காக அலைபவனா நீ நாடு அழைக்கவில்லையா என்கிற மனக்குரல் அவரை தொந்தரவு செய்கிறது. நான்கு நாட்களில் அங்கிருந்து புறப்பட்டு டிக்கட் இல்லாமலே இரயில் ஏறுகிறார். பரிசோதகர் சோதனையால் அவர் இறக்கிவிடப்பட்டார். அந்த ஸ்டேஷனில் ஒருவர் அவருக்கு உணவளித்து ஜான்சிக்கு இரயில் ஏற்றி விடுகிறார். முப்பத்தாறு மணிநேரத்திற்குப் பின் கிடைத்த உணவது.

ஜான்சியில் வீரமங்கை ராணி லஷ்மிபாய் கோட்டையை சென்று பார்த்தார் ராஜ்குரு. அங்கு ஏகநாத் சதாசிவ் கோர் என்பாரிடம் பழக்கம் ஏற்பட்டது. நாட்டிற்கு தொண்டாற்ற விரும்பும் நீ காசி சென்று தொடர்புகளை ஏற்படுத்திக்கொள் என்றார் சதாசிவ். அங்கு உனது கல்வியும் மேம்படும் என்றார். இருவரும் லக்னோ, கான்பூர், பிரயாக் வழியே 14 நாட்களில் காசி சென்றனர். வழியில் புடவை வியாபாரம் செய்து செலவை சரிகட்டிக்கொண்டனர்.

காசி விஸ்வநாதர் கோயில் வழிப்பட்டிற்கு பின்னர் இடம்தேடி அவர்கள் தங்கினர். தங்கள் குடும்ப நண்பர் பாண்டுரங்க ஜோஷி என்பார் அகில்யபாய் ஆசிரமத்தில் இருப்பதை அறிந்து ராஜ்குரு அங்கு சென்றார். அங்கு சில வீடுகளுக்கு சென்று உணவை வாங்கிக்கொள்ளும் பழக்கத்தில் ஆசிரமவாசிகள் இருந்தனர். ராஜ்குருவிற்கு அது ஏற்புடையதாக இருக்கவில்லை. அங்கு காலை 5 மணிக்கு எழவேண்டும். கங்கையில் குளிக்கவேண்டும். 5 வீடுகளில் பிச்சை புகவேண்டும். இரண்டுமணி வகுப்பிற்கு செல்லவேண்டும். இரவு வீட்டுப்பாடங்களை செய்யலாம். இரவு 8 மணிக்கு படுக்கைக்கு செல்லவேண்டும் எனபது வழக்கமாக இருந்தது. அங்கு பல மராத்தி நண்பர்கள் சமஸ்கிருத பள்ளியில் படித்துக்கொண்டிருந்தனர். ராஜ்குருவும் அங்கு சென்று ஆசிரியர்களிடம் பயின்று நல்ல பெயர் வாங்கினார்.

ராஜ்குரு 5 அடி 6 அங்குல உயரத்துடன் பார்ப்பதற்கு மிகச்சாதாரண தோற்றம் கொண்டவராக இருந்தார். பகத்சிங் போன்ற வசீகரம் அவரிடம் இல்லை. 1930ல் லாகூர் பார்ஸ்டல் சிறையில் தனது வறுமையின் கோரத்தையும் உணவில்லாமல் அவதிப்பட்டதையும் பள்ளிக்கட்டணம் கட்ட முடியாமல் போனதையும் ராஜ்குரு சிறை அதிகாரிகளிடம்

தெரிவித்ததை அறியமுடிகிறது. வேப்பிலை, பச்சை கோதுமை தண்ணீர் சாப்பிட்டு 21 நாட்கள் இருந்ததாகவும் தன் அனுபவத்தை சொல்லியிருக்கிறார்.

குளித்துவிட்டு கங்கை கரையில் ரிக்வேதம் சொல்வதைப் பார்த்து மராத்தியரான பல்வந்த சவர்கனோகர் என்பார் ராஜ்குருவிற்கு நண்பரானார். இருவரும் ஒன்றாக உடற்பயிற்சிகள் செய்தனர். ஒன்றாக தங்கினர். குழந்தைகளுக்கு பாடம் சொல்லிக்கொடுத்து வருவாய் தேடிக்கொண்டனர். இருவரும் நூலகம் சென்று அங்கு தேசிய சமூக பிரச்சனைகளில் நடக்கும் விவாதங்களை கண்ணுற்றனர்.

இன்பமும் துன்பமும் பிறர் தர வாரா எனும் கருத்தில் இருந்தார் ராஜ்குரு. அங்கு நடந்த விவாதம் ஒன்றில் மாணவர் ஒருவர் ஆங்கிலமே வளர்ந்து வரும் மொழி- சமஸ்கிருதம் செத்தமொழி என கருத்து தெரிவித்தார். இதைக்கேட்ட ராஜ்குரு பெரும் கோபம் கொண்டார். ஏற்கனவே ஆங்கிலத்தேர்ச்சி எனும் பிரச்சனையால்தான் அவர் சகோதரனுடன் முரண்பட்டு வீட்டைவிட்டே வெளியே வந்தவர். தனது உடல்பலத்தை பெருக்கிகொண்டு அந்நிய ஆட்சி எதிர்த்து போராடவேண்டும் என உறுதி இதனால் அவரிடம் அதிகரித்தது. வில்வித்தை கற்றார். அவரின் குறிபார்க்கும் திறன் மேம்பட்டது. விடுமுறையில் புனே திரும்பிய ராஜ்குரு தாயாரை சந்தித்தார். அவரின் சம்ஸ்கிருத புலமையை பார்த்து நெருங்கியவர்கள் வியந்தனர்.

ராஜ்குரு குறித்த செய்திகள் அங்கு தேடிச் சென்றபோது தனக்கு கிடைக்கவில்லை என்கிறார் ஆய்வாளர் அனில் வர்மா. முகந்த சாஸ்திரி பண்டாம்கர் எனும் ஆசிரியர் ராஜ்குரு இரண்டு ஆண்டுகளுக்கு மேல் சமஸ்கிருதம் கற்றதாக தெரிவித்தார். ராஜ்குரு 3 ஆண்டுகள் காசியில் இருந்தும் அவர் எங்கெல்லாம் தங்கினார் என்ற விவரம் அறியமுடியாமல் இருக்கிறது. அவர் தங்கியிருந்த ஒரு முகவரியில் பின்னர் பலவருடங்கள் இஸ்லாமிய குடும்பத்தார்கள் தங்கியிருந்த செய்தியை அனில் பதிவிடுகிறார்.

ராஜ்குருவுடன் தங்கியிருந்த சவர்கனோகர் சாவர்க்கரின் சகோதரர் பாபராவ் உடன் தொடர்பில் இருந்தார். பாபராவ் மற்றும் சவர்கனோகருக்கு முனிஸ்வர் அவஸ்தி என்கிற தேசபக்தருடனும் தொடர்பு இருந்தது. அவர்தான் இந்துஸ்தான் ரிபப்ளிகன் அசோசியேஷன் பற்றி சொல்கிறார்.

சந்திரசேகர் ஆசாத் பற்றியும் கூறுகிறார். ஆசாத் காசிக்கு வருகிறார் என்கிற செய்தியும் சவர்கனோகருக்கு கிடைக்கிறது. ராஜ்குருவும் ஆசாத்தை சந்திக்க ஆர்வம் காட்டினார். இருவரும் பாபராவை அணுகினர். ஹனுமான் வியாயம் பிரச்சாரக் மண்டல் சென்று தொடர்புகொள்ளுமாறு பாபராவ் பணிக்கிறார். ராஜ்குரு தனது 'உத்தம் தேர்வை' சந்திக்கவேண்டிய நிலையில், தேர்வு தேவையில்லை நாட்டுப்பணி என முடிவெடுக்கிறார்.

ஹனுமான் வியாயம் பிரச்சாரக் மண்டல் என்பது அமராவதியில் 1914ல் துவக்கப்பட்ட இயக்கம் . இளைஞர்களின் உடற்பயிற்சி கழகமது. தேசபக்தி மற்றும் கட்டுமஸ்தான உடல் கொண்ட இளைஞர்கள் எனும் கொள்கைகளில் இயங்கியது. நிர்மலா தேஷ்பாண்டே போன்றவர்கள் கூட இதில் தொடர்பில் இருந்துள்ளனர். கல்வி நிறுவனங்களையும் அது நடத்திவந்தது. அங்கு வந்து சேர்ந்த ராஜ்குரு பி டி (PT) என்பதில் மாஸ்டர் டிகிரி பெற்றார். தனது ராஜஸ்தானத்து நண்பர் லச்சுமால் மூலம் துப்பாக்கி சுடும் பயிற்சி பெற்றார். வழக்கமான வில் அம்பை விட சக்திவாய்ந்ததாக துப்பாக்கி இருக்கிறது என்பதை ராஜ்குரு உணர்ந்தார். மல்யுத்த போட்டியில் கலந்துகொண்டு சில வெளிநாட்டு வீரர்களை அவர் வீழ்த்தினார். அமராவதியிலிருந்து தாய்க்கு எழுதிய கடிதத்தில் 'உனக்கு இனி ஒரே மகன் திங்கர்தான், மற்றவனாகிய ராஜ்குரு இனி நாட்டிற்கு தன்னை அர்ப்பணித்துக்கொள்கிறான். உனது ஆன்மாவை சாந்தப்படுத்திகொள்' என ராஜ்குரு எழுதினார்.

ஆசாத்தின் தோழர் வைசம்பாயன் என்பார் மூலம்தான் ராஜ்குருவை ஆசாத் சந்தித்திருக்கலாம். காசி பார்க் ஒன்றில் வைசம்பாயனை தாக்கிய பிரிட்டிஷ்காரர் ஒருவரை அங்குவந்த ராஜ்குரு தாக்கினார். பின்னர் வைசம்பாயனும் ராஜ்குருவும் தப்பிச் சென்றனர். இருவரும் பிரிட்டிஷ் அடக்குமுறைகள் குறித்து பரிமாறிக்கொண்டனர். ஜான்சி திரும்பிய வைசம்பாயன் ராஜ்குரு பற்றி ஆசாத்திடம் தெரிவிக்க சந்திக்கும் ஏற்பாடு நடந்ததாகவும் செய்திகள் கிடைக்கின்றன.

கான்பூரில் சந்திப்பு நிகழ்கிறது. ஆசாத் வினவுகிறார். புரட்சிகர இயக்கம் என்றால் குண்டுகளால் உடல் துளைக்கப்படலாம், தூக்கு ஏற்றப்படலாம், நாடு கடத்தப்படலாம்- அறிவீரா?. ஆமாம் அறிவேன். இதற்கெல்லாம் அச்சப்படமுடியாது என ராஜ்குருவின் பதில் கம்பீரமாக வந்தது. தங்கள் சிறப்பு தகுதிகள் என்னவென ஆசாத் கேட்கிறார். உடல்பலம் கொண்டவன்.

நான்கு நாட்கள் கூட பட்டினி கிடக்கமுடியும். எவரையும் கொல்லவேண்டுமெனில் துணிவுடன் செய்ய இயலும். மல்யுத்தம் தெரியும் என்கிறார். கொடுமைகளை தாங்கும் சக்தி இருக்கும் என்கிறார் ராஜ்குரு. பலவீனம் ஏதாவது- உண்டா என ஆசாத் கேட்கிறார். தூங்குமூஞ்சி என ராஜ்குரு பதில் தருகிறார்.

ராஜ்குருவிற்கு ’எம்’ (மராத்தா) எனும் கோடும் ரகுநாத் என்கிற புனைப்பெயரும் தரப்படுகிறது. காசிக்கு திரும்பி செயல்படுங்கள் அழைப்பு வரும்போது வரலாம் என ஆசாத் அறிவுறுத்துகிறார். ஒருநாள் காசி வந்த சிவ வர்மா எனும் தோழர் இயக்கம் பணி கொடுத்துள்ளது - கான்பூர் DAV கல்லூரிக்கு வரவேண்டும் என ராஜ்குருவிடம் தெரிவிக்கிறார். அடுத்த வாரத்தில் ராஜ்குரு அங்கு செல்கிறார். அங்குதான் புரட்சிகர குழுவினரான ஆசாத், பகத்சிங், பதுகேஸ்வர் தத், சிவவர்மா, அஜாய்கோஷ் மகாவிர் சிங் போன்றவர்கள் வளர்ந்து வந்தனர்.

ராஜ்குரு துப்பாக்கி வரும்வரை சிவவர்மாவுடன் இருக்க பணிக்கப்பட்டார். அங்கு வரும் கல்லூரி நண்பர்கள் இங்கு என்ன தூங்கும் போட்டிக்காகவா ராஜ்குரு வந்துள்ளார் என கேலி பேசும் அளவு அவர் உறங்கினார். இதில் எனக்கு போட்டியாளர் எவரும் இல்லை என ராஜ்குருவும் வேடிக்கையாக சொல்வார்.

ஹாசன் நிசாம் என்பவர் டெல்லியில் புரட்சிகரப் பணிகளுக்கு தடையாக இருக்கிறார் எனவே அவரை முடிக்கவேண்டும் என்ற எண்ணம் வலுப்பெற்றது. சிவ வர்மாவும் ராஜ்குருவும் டெல்லி வருகிறார்கள். சிவ வர்மா வெளிச்சென்று நிலைமைகளை கணித்துவருகிறார். ராஜ்குருவிற்கு நடுக்கு ஜீரம் ஏற்படுகிறது. அவ்விடுதி விட்டு உடன் செல்லவேண்டும் என்கிறார் ராஜ்குரு. இருவரும் இரயில்வே ஸ்டேஷன் சென்று தங்குகிறார்கள். அவ்விடுதி விபச்சாரம் நடைபெறும் இடமாக இருக்கிறது. எனக்கு மூன்று பெண்களை அனுப்பிவிட்டனர். தலை தெறிக்க ஓடிவந்துவிட்டேன் என்ற செய்தியை ராஜ்குரு சிவவர்மாவிடம் தெரிவிக்கிறார். மூன்று அழகிகளை கவர்ந்திழுக்கும் அழகா நான் என ராஜ்குரு வேடிக்கையாகவும் பேசுகிறார்.

ராஜ்குரு ஜனவரி 30 1928 அன்று காரிலிருந்து இறங்குபவர் நிசாம் என நினைத்து குறிவைத்து சுட்டார். மார்பில் குண்டு பாய்ந்தது. மூன்று கி மீ தூரம் ஓடிவந்து குளிர் ஓடை ஒன்றில் பதுங்கினார். துரத்திய போலீஸ்

அங்கு வந்தும் அவரைக் காணாமல் திரும்பியது. ராஜ்குரு ஹஸ்ரத் நிஜாமுதீன் ரயில் நிலையம் வந்து மதுரா சென்றார். மறுநாள் பத்திரிகை பார்த்தபின்தான் சுடப்பட்டவர் நிசாமின் மாமனார் என்று ராஜ்குரு உணர்ந்தார். கான்பூர் சென்று தனது அவசரத்தால் நேர்ந்த தவறுக்கு மன்னிப்பு கோரினார். இதனால் கட்சியைவிட்டு உன்னை அனுப்பப்போவதில்லை என ஆசாத் ஆறுதல் கூறினார்.

பகத்சிங்கும் ராஜ்குருவும் சந்திக்கும்போது இருவரும் புனைப்பெயர்களை கூறிக்கோண்டே சந்தித்தனர். ரஞ்சித் - ரகுநாத் என அவர்கள் சொல்லிக்கொண்டு அறிமுகமாயினர். இருவரின் குணாதிசயங்களும் மாறுபட்டு இருந்தன. பகத்சிங் சொல்வதை அனைவரும் நம்புகிறார்கள்- அதையே நான் சொன்னால் ஏன் ஏற்பதில்லை என்று கூட ராஜ்குரு நண்பர்களுடன் சண்டையிடுவார். இருவருக்குமே யார் முதலில் தேச சாதனை புரிவது என்பதில் ஒருவகை போட்டியிருந்தது. ஆனாலும் கட்சி வாழ்க்கையில் பகத்சிங் மூத்தவர் என்பதால் ராஜ்குரு அவர் தலைமையை ஏற்பது என்பதில் உடன்பட்டவராகவே நடந்துகொண்டார்.

இயக்கத்தின் நிதி நெருக்கடியை சரிகட்ட கோரக்பூர் அரசாங்க கஜானாவை சூறையாடுவது என முடிவெடுத்தனர்.. பகத்சிங் ராஜ்குரு சிவ வர்மாவிற்கு பொறுப்பு கொடுக்கப்பட்டது. அவ்வூரில் ரூ 5 க்கு வாடகை வீடு எடுத்து தங்கினர். ஓர் இரவில் ராஜ்குரு தலையருகே பாம்பு வந்தது. பகத்சிங்கும் சிவவர்மாவும் ஜாக்கிரதையாக ராஜ்குருவை எழுப்பியும் அவர் எழுந்திருக்கவில்லை. பாம்பு மெதுவாக நகர்ந்து அடுத்த அறைக்கு சென்றது. அப்படிப்பட்ட கும்பகர்ண உறக்கப் பழக்கம் மட்டும் அவரிடமிருந்து விடைபெறவேயில்லை.

கோரக்பூர் கொள்ளைக்கு வாய்ப்பில்லை என அறிந்து அங்கிருந்து வெளியேற இயக்க உத்தரவு அவர்களுக்கு வந்தது. பகத்சிங்கும் சிவ வர்மாவும் இரயில் ஏற ஸ்டேஷன் வந்துவிட்டனர். நேரம் இருக்கிறதே என்று எண்ணி பாலத்தின் அருகே பிச்சை எடுப்பவர்களுடன் ராஜ்குரு உறங்கிவிட்டார். பின்னர் வந்து தோழர்களுடன் விட்டுவிட்டு வந்ததற்கு சண்டையிட்டார்.

3

செப்டம்பர் 1928ல் டெல்லி பிரோஷா துக்ளக் கோட்டையில் 12 முக்கிய புரட்சியாளர்கள் கூடினர். சுக்தேவ், பகத்சிங் பஞ்சாபிற்காகவும், குந்தன்லால் ராஜ்புதனம், மத்திய மாநிலப் பகுதியிலிருந்து சிவ வர்மா, பிரம்ம தத், ஜெயதேவ், பிஜாய் குமார், சுரேந்திர நாத், பீகாரிலிருந்து மன்மோகன் பானர்ஜி பிரதிநிதிகளாக கூடினர். ஆசாத் முடிவுகளுக்கு கட்டுப்படுவதாக செய்தி அனுப்பியிருந்தார். வங்கப்பிரதிநிதிகள் வரவிருப்பமில்லை எனத் தெரிவித்தனர். அமைப்பிற்கு ஹிந்துஸ்தான் சமாஜ்வாடி பிரஜாதந்திரா சேனா ( Hindustan Socialist Republican Army) எனப் பெயரிட்டனர். பகத்சிங்கும் பிஜாய் குமார் சின்ஹாவும் மாநில ஒருங்கிணைப்பாளர்கள்- மாநில பிரதிநிதிகளும் அறிவிக்கப்பட்டனர். ஆசாத் கமாண்டர்-இன் சீஃப் ஆக ஏற்கப்பட்டார். தலைமையகம் ஆக்ராவிலிருந்து ஜான்சிக்கு மாற்றப்பட்டது. கீழ்கண்ட முடிவுகள் எட்டப்பட்டன.

- நிதி மற்றும் ஆயுதங்களுக்கு மத்திய கமிட்டிதான் பொறுப்பு
- குறிப்பிட்ட செயல்முடிந்தவுடன் ஆயுதம் மத்திய கமிட்டிக்கு திரும்பத் தரப்படவேண்டும்.
- கொள்ளை என்பது நிதித்தேவையை பொறுத்தே செய்யப்படவேண்டும். அதுவும் அரசு கஜானா, அரசு வங்கிகள், அஞ்சலகங்களில் மட்டுமே கொள்ளை நடத்தப்படவேண்டும்.
- சைமன் கமிஷன் எதிர்ப்பில் தீவிரமாக பங்கேற்கவேண்டும். அதன் உறுப்பினர்கள் இரயில் மூலம் பயணித்தால் குண்டுவீச்சுக்கு முயற்சிக்கலாம்..
- குண்டு தயாரிப்பு அறிந்தவர்களை அமைப்பிற்கு கொணரவேண்டும்..

சைமன் எதிர்ப்பு இயக்கங்கள் முக்கிய நகர்களில் தீவிரமாக நடந்தன. லாகூர் வரும்போது எதிர்ப்பு இயக்கம் லாலாஜி தலைமையில் நடத்த முடிவானது. நவஜவான் பாரத் சபா முக்கிய பங்காற்றியது. அக்டோபர் 30 1928ல் 144 தடை உத்தரவையும் மீறி 5000 தொண்டர்கள் திரண்டனர்.

ஸ்காட் - சாண்டர்ஸ் பொறுப்பில் போலீஸ் தடியடியில் இறங்கியது. லாலாஜி மீது தாக்குதல் நடந்தது. இரத்தம் சொட்டத்துவங்கியது. ஆர்ப்பாட்டத்தை தொடரவேண்டாம் என இளைஞர்களுக்கு லாலாஜி

அறிவுரை நல்கினார். என் மீது விழுந்த அடி பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்கு சவப்பெட்டியாக மாறும் என்றார் லாலாஜி. அடுத்த 18 நாட்களில் நவ 17 1928ல் அவர் மறைந்தார். நாட்டில் பெருங்கோபம் எழுந்தது. இர்வின், சைமன் உட்பட இரங்கல் தெரிவித்தனர்.

லாலாஜியின் மரணத்திற்கு 10 பிரிட்டிஷார்களையாவது பழிதீர்க்கவேண்டும் என்றார் பகத்சிங். ஆசாத் பகத்சிங், ராஜ்குரு சந்தித்து முடிவெடுப்பது என தீர்மானித்தனர். ஜெயகோபாலும் சுக்தேவும் லாகூர் ரயில் நிலையத்தில் காத்திருந்தனர். போராளிகளின் சூட்கேசில் துப்பாக்கிகள் இருந்தது. டிசம்பர் 4 1928 பழி வாங்கும் நாள் என தீர்மானிக்கப்பட்டது.

பகத்சிங், சுக்தேவ், ராஜகுரு, மகாவீர் சிங், கிஷோரிலால், ஜெய்கோபால் , ஹன்ஸ்ராஜ் வோரா, காளிச்சரண் ஆகியோருக்கு லாகூர் பஞ்சாப் வங்கி கொள்ளை பொறுப்பு கொடுக்கப்பட்டது. பகத்சிங் - மகாவீர் கார் ஏற்பாடு, காளிச்சரண் டெலிபோன் துண்டிப்பு, சுக்தேவ் காவலர்களை பார்த்துக்கொள்வது, கரன்சிகளை வெளிக்கொணர்வது, ஆசாத் கார் ஓட்டுவது என்பது ஒவ்வொருவருக்கும் ஒதுக்கப்பட்ட வேலைத்திட்டம்.

டாக்ஸி கொணர முடியாமல் திரும்பிய மகாவிர் குதிரை வண்டியில் வந்து இறங்கி இயலாமையை சொன்னார். ஆசாத் பின்வாங்க உத்தரவிட்டார். ராஜ்குருவிற்கு இதில் எந்த பொறுப்பும் கொடுக்கப்படவில்லை. அடுத்து பெரிய பொறுப்பு காத்திருக்கிறது என சொல்லப்பட்டது.

ஜே சி ஸ்காட்டை கொலைசெய்வது என்கிற முடிவை புரட்சிக்காரர்கள் எடுத்தனர். டிசம்பர் 10 1928ல் ஆசாத் தலைமையில் மத்திய கமிட்டி கூட்டப்பட்டது. அதன் உறுப்பினர்களில் 4 பேர் பங்கேற்றனர். லாலாஜி இறப்பிற்கு பழி தீர்ப்பது எனும் பகத்சிங்கின் தீர்மானம் ஏற்கப்பட்டது. சுக்தேவ் ஒருங்கிணைப்பாளர் என அறிவிக்கப்பட்டது. ஆசாத், பகத்சிங், ராஜ்குரு, ஜெய் கோபால் துணைவர்களாக செயல்படுவர் என சுக்தேவ் அறிவித்தார்.

டிசம்பர் 11-14 நாட்களில் ஸ்காட் நடமாட்டம் முழுமையாக கண்காணிக்கப்பட்டது. அருகாமையில் இருந்து ஸ்காட் உருவத்தை முழுமையாக ஜெய்கோபால் பார்த்திருக்கவில்லை. டிசம்பர் 17, 1928 காலை

10 மணி அளவில் அய்ரோப்பிய போலீஸ் அதிகாரி ஒருவர் மோட்டார் சைக்கிளில் இறங்குவதை பார்க்கிறார். ஸ்காட் அன்று விடுப்பு எடுத்து இருந்தார். துணை கண்காணிப்பாளர் சாண்டர்ஸ்தான் வந்த அதிகாரி. ஆசாத்திடம் ஜெய்கோபால் ஸ்காட் வந்ததாக நினைத்து செய்தியை தெரிவிக்கிறார். மதியத்திற்குள் காரியம் முடியவேண்டும் என ஆசாத் முடிவெடுத்தார். ராஜ்குருவிடம் ரிவால்வார், பகத்சிங்கிடம் பிஸ்டல் தரப்பட்டது. ராஜ்குரு நடந்து செல்லவேண்டும். ஆசாத், பகத்சிங் இரு சைக்கிள் எடுத்து வரவேண்டும் என முடிவானது.

மாலை 4 மணிக்கு போலீஸ் அலுவலகம் முன்பு சைக்கிள் ரிப்பேர் பார்ப்பது போல் ஜெய்கோபால் நின்றார். சற்றுத்தள்ளி பகத்சிங் இருந்தார். சாண்டர்ஸ் தனது பைக்கில் மெதுவாக மெயின் கேட் அருகே வருகிறார். ராஜ்குருவிற்கு ஸ்காட் வருகிறார் என்கிற சிக்னல் கொடுக்கப்படுகிறது. ராஜ்குரு சுடுகிறார். குண்டு மார்பை துளைக்கிறது. ஒருகால் பைக்கில் கிடந்தபடியே சாண்டர்ஸ் சரிகிறார். ஆகா தவறான ஆள் என பகத்சிங் உணர்ந்தாலும் சாவை உறுதிப்படுத்த சுடுகிறார்.. பின்னர் இருவரும் டி ஏ வி கல்லூரி பக்கம் ஓடுகின்றனர்.

ஹெட்கான்ஸ்டபிள் சன்னன் சிங்கும் ட்ராபிக் இன்ஸ்பெக்டர் ஃபீம் என்பாரும் துரத்துகின்றனர். ராஜ்குரு சுடுகிறார். ஆனால் குறி தப்பியது. ஃபீம் கீழே விழுந்து விடுகிறார். சன்னன் மட்டும் தொடர்ந்து துரத்துகிறார். ஆசாத் சன்னன் தொடையில் சுடுகிறார். அடுத்த ஒருமணியில் லாகூர் மாயா மருத்துவமனையில் சன்னன் இறக்கிறார். போலீஸ்படை கல்லூரியின் அனைத்து பக்கங்களையும் தங்கள் வசம் கொணர்ந்து இளைஞர்களை தேடுகிறது. அவர்கள் மாயமானார்கள் என்கிற ஏமாற்றம் அவர்களுக்கு விஞ்சுகிறது. நகரத்தில் பெருமித பேச்சும் ,பயம் நிறைந்த பேச்சும் பெருகியது. சாண்டர்ஸ் பயிற்சி நிலை அதிகாரி. பஞ்சாப் கவர்னரின் தனி உதவியாளருக்கு மருமகனாகப் போகிறவர். 25 வயது இளைஞர். பிரிட்டிஷ் அதிகாரிகள் குழாம் கலக்கத்துடன் கோபம் அடைந்தது.

மறுநாள் HSRA சார்பில் லாலாஜி சாவிற்கு சாண்டர்ஸ் பழிதீர்க்கப்பட்டார் என்கிற போஸ்டர் வெளியானது. எம் மக்களை கொடுமைப்படுத்துவதை நிறுத்தவேண்டும். எவ்வளவு கொடுமையாக நீங்கள் இருந்தாலும் எங்களுக்கு ரிவால்வர் கிடைக்கும். அந்நிய கொடுங்கோலர்க்கு தகுந்த

பாடம் கற்றுக்கொடுப்போம். முப்பது கோடி மக்களின் உயரியத் தலைவரை நீங்கள் சிறுமைப்படுத்திவிட்டீர்கள். ஆயுதம் தாங்கிய புரட்சிக்கு தேவையான ஆயுதங்கள் இல்லாமல் போகலாம். ஆனால் பழிதீர்க்க ஆயுதம் கிடைக்கும். எங்கள் மக்களே எங்கள் நடவடிக்கைகளை கண்டித்தாலும் அந்நிய கொடுங்கோலர் பாடம் கற்பர். எவ்வளவு இடையூறு ஏற்பட்டாலும் புரட்சியை முன்னெடுப்போம் என்பது அவர்கள் வெளியிட்ட அறிக்கையின் சாரம்.அதில் பால்ராஜ் கமாண்டர் இன் சீஃப் என்பதும் வெளியிடப்பட்டிருந்தது.

பகவதி சரண் கல்கத்தா மாநாட்டிற்கு சென்றிருந்தார். சுக்தேவ் பகவதிசரண் துணைவியாரிடம் உதவியை கோரினார். சாண்டர்ஸ் கொலையுடன் சம்பந்தப்பட்ட ஒருவருக்கு துர்கா தனது குழந்தையுடன் மனைவியாக செல்லவேண்டும் என்பது ஏற்பாடானது. துர்கா சம்மதித்ததுடன் ரூ 500 எடுத்து செலவிற்கு தருகிறார். மாறுவேடத்தில் துர்கா வீட்டிற்கு பகத்சிங் வருகிறார். ராஜ்குரு இவர்களின் வேலைக்காரராக வேடம் தரிக்கிறார். அழுக்கான கந்தல் ஆடை, அழுக்கு சாக்குப்பை சகிதம் ராஜ்குரு காட்சியளிக்கிறார்.

பகவதி சரண் வீட்டிலிருந்து டிசம்பர் 20 1928 மாலை 5 மணிக்கு லாகூர் ஸ்டேஷனுக்கு வருகின்றனர். இரயில்வே ஸ்டேஷனுக்கு வரும்போது உயர் அதிகாரி தோற்றத்தில் பகத்சிங்கும், அதிகாரியின் மனைவி தோற்றத்தில் துர்காவும் வருகின்றனர். ராஜ்குரு டர்பன், பைஜாமா கோட்டுடன் உதவியாளராக செல்கிறார். டேராடூன் எக்ஸ்பிரஸ் வண்டியில் ராஜ்குரு மூன்றாம் வகுப்பு, அவர்கள் முதல்வகுப்பில் பயணம் மேற்கொண்டனர் .

மதுரா ஆக்ரா என பகத்சிங்கும் ராஜ்குருவும் சென்றனர். ராஜ்குரு எந்த நேரத்திலும் எதற்கும் கவலைப்படாது தூங்கிவிடுபவர். பகத்சிங் கூடுதல் விழிப்புடன் இருக்கவேண்டியநிலை. ஒரு முறை பகத்சிங் மிகுந்த களைப்பில் 'நான் ஒருமணியாவது உறங்கவேண்டும். நம்பித்தூங்கட்டுமா' என ராஜ்குருவை கேட்கும் நிலை வந்தது. பொறுப்புடன் இருப்பாயா என பகத்சிங் கேட்டார். ராஜ்குரு 'நான் என்ன பொறுப்பற்றவனா- நீ தூங்கலாம்' என்றார். 'என்னை இரவு 1.30க்கு எழுப்பி விடு. கோட்டில் துப்பாக்கி ஜாக்கிரதை' என எச்சரித்துதான் பகத்சிங் தூங்க சென்றார். விடியற்காலை 4 மணிக்கு எழுந்து பார்த்தால் மற்றொரு பெஞ்சில் குறட்டையுடன் ராஜ்குரு அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தார்.

அழகை ஆராதிக்கும் குணம் கொண்டவர் ராஜ்குரு. ஒருமுறை அறையில் குளிக்கும் பெண் ஒன்றின் காலண்டரை மாட்டி வைத்திருந்தார். அதைப் பார்த்த ஆசாத் முதலில் அதை எடுத்து வீசுங்கள் என்றார். வெளியிலிருந்து வந்த ராஜ்குரு காலண்டரை எடுத்தது யார் எனக்கேட்க குப்பையில் கிடக்குது பார் என உடன் இருந்த தோழர் சொன்னார். 'நான்தான் வீசினேன்' என்றார் ஆசாத். ஏன் என்றார் ராஜ்குரு. இந்த மாதிரி படங்களோடு நாம் சம்பந்தப்படலாமா என ஆசாத் கோபமாக வினவுகிறார். அழகாக இருக்கிறது என்றார் ராஜ்குரு. அழகாக இருந்தால்... என்கிறார் ஆசாத். அப்படியானால் அழகை அழிக்க வேண்டுமா- தாஜ்மஹாலை போய் அழியுங்கள் என்கிறார் ராஜ்குரு. அவசியம் எனில் முடியும் எனில் செய்யவேண்டியதுதான் என ஆசாத் சற்றுக் கோபமாக பதில் தருகிறார்.

இந்த உலகை அழகாக ரம்மியமாக மாற்றவே நாம் இருக்கிறோம். அழகை அழிப்பதற்கல்ல என்கிறார் ராஜ்குரு. ஆசாத் நிதானமாகிறார். என்னை அந்த அர்த்ததில் புரிந்துகொள்ளாதே என ஆசாத் அன்புடன் பேசத்துவங்குகிறார். நாம் நம் குடும்பத்தை விட்டு கவனம் சிதறா வேலைக்காக இருக்கிறோம். ஒற்றை இலக்குடன் செயல்பட்டு வருகிறோம். அழகை ஆராதிப்பது உன்னை பலவீனமாக்கி விடக்கூடாது என்கிற தன் கவலையை ஆசாத் வெளிப்படுத்தினார். தோழர்கள் குழாம் ஒருமுறை தாஜ்மகாலையும் காணச்சென்றனர். போய்வந்து ராஜ்குரு எழுதிய வசன கவிதையை நண்பர்கள் கேலி செய்தனர். பகத்சிங் இப்படி

எழுவதை விட்டுவிடு- இல்லையேல் இந்தா துப்பாக்கி என்னைக் கொன்றுவிடு என கேலி பேசினார்.

வேறு ஒருமுறை ராஜ்குரு பாடுவதாக பாவித்துக்கொண்டிருந்தார். ஆசாத் தயவு செய்து வாசலைப்பார் என்றார். ஏன் போலீஸ் வரக்கூடுமா என அப்பாவியாக ராஜ்குரு கேட்டார். இல்லை கழுதை இருப்பதாக நினைத்து வண்ணான் எவராவது வந்துவிடப் போகிறார் என ஆசாத் கேலி செய்தார். இவ்வாறு ராஜ்குரு செய்யும் சில்லறை தவறுகள் குறும்புகள் அவரது நண்பர்களுக்கு உற்சாகத்தை தந்ததுடன் பொழுபோக்காகவும் இருந்தன.

சிலநேரம் தாயே விடைகொடு. வெற்றிக்கொடி ஏற்றப்போகிறேன் என பாடத்துவங்குவார் ராஜ்குரு. அப்போதும் ஆசாத் 'வந்துட்டார்' போய் பார் என்பார். அதான் வண்ணான் வந்துவிட்டார் என சிரிப்பார் ஆசாத். தான் சற்று தீவிரமானவன் என ஆசாத்திடம் நிரூபிக்க ராஜ்குரு தன் மார்பில் சூடு போட்டுக்கொண்டுவிட்டார். இரவு அவர் முனகியபோதுதான் ஆசாத்திற்கு அது தெரியவந்தது. கண்ணீர் மல்க அவருக்கு மருத்துவ சிகிச்சையை வீட்டிலேயே ஏற்பாடு செய்தார்.

ராஜ்குரு பேச்சுப்பிரியர். பொது இடங்களில் தான் என்ன வேடம் இட்டுள்ளோம் என்பதை மறந்து மனதில் பட்டதை பேசிவிடுவார். போலீஸ் கண்காணிப்பு இருக்கும் என்பதைக்கூட அவர் உணராமல் இருப்பார். ஆசாத் போன்றவர்களுக்கு சில நேரம் இம்சையாக இருக்கும். ஆசாத் கடுமையாகிவிடுவார். ரகுநாத்தை திட்டுகிறேன் என குறைப்படுகிறீர்களே அவன் செய்யும் காரியங்கள் எவ்வளவு பிரச்சனைகளை ஏற்படுத்தும் என அறிவீர்களா என கேட்பார். பலர் அமர்ந்து இருக்கும் இரயிலில் கொரில்லா போராட்டம் மராட்டிய சிவாஜி என்றெல்லாம் உளறி கொட்டினால் சகிக்க முடியாதென்பார் ஆசாத்.

பகத்சிங்கும் ராஜ்குருவும் ஆக்ராவிலிருந்து டெல்லி செல்ல பணிக்கப்பட்டனர். டோங்கா பிடித்துவர ராஜ்குரு சென்றார். அவருக்கு வேலைக்கார பாத்திரம். அதை மறந்துவிட்டு பகத்சிங்கை நண்பர் அழைப்பதுபோல் அழைத்து அருகில் உட்கார சொன்னார். பகத்சிங் வேலைக்காரர் அமரும் இடத்தில் அமர சிக்னல் தருகிறார். இப்படி மறந்து செயல்படுவது ராஜ்குருவின் இயல்பாக இருந்தது. ஸ்டேஷன் வந்ததும் தலையில் சுமந்துவந்த பெட்டியை இறக்கிவிட்டு மூன்றாம் வகுப்பு பெட்டிக்கு ராஜ்குரு செல்லவேண்டும். மறந்து போய் கைகுலுக்க

நீட்டுகிறார். பகத்சிங் சத்தம் போட்டவுடன் வேலைக்காரன் நினைவு வந்து செல்கிறார்

மற்றொருமுறை ராஜ்குரு கான்பூர் சென்று பாதுகாப்பான வீடு ஒன்றை பிடிக்கவேண்டும் என்கிற வேலை தரப்படுகிறது. ஆசாத் பகத்சிங் உள்ளிட்டவர் பிறகு வந்து சேர்வது என்பது திட்டம். ராஜ்குருவால் பாதுகாப்பான வீட்டை பிடிக்கமுடியவில்லை. ஸ்டேஷனில் ஆசாத்திடம் இருந்த டிரைவிங் லைசென்ஸ், பணம் 'பிக்பாக்கெட்' ஆனது. செலவிற்கு வேறு வழியில்லாமல் போனது. அனைவரும் ஆக்ரா திரும்பிவிடுவது என முடிவெடுக்கவேண்டிய சூழல் ஏற்பட்டது. புரட்சிக்காரர்களுக்கும் இப்படி பல சோதனைகள் - பல சோதனைகள் தோல்விகளுக்கு பின்னரே இலட்சியம் நோக்கி அவர்களால் நகரமுடிகிறது .

கங்கைக்கரையில் ஆசிரமவாசி ஒருவரிடம் ஏராள நகைகள் பணம் இருப்பதை அறிந்து ஆயுதம் வாங்குவதற்காக கொள்ளையிடலாம் என தோழர்கள் கான்பூரில் முடிவெடுத்தனர். சிவ வர்மா, ராஜ்குரு, பகவான்தாஸ் ஆகியோர் பொறுப்பு என்றார் ஆசாத். ஆசிரமம் புகை சூழந்து கஞ்சா குடிப்போர்களின் இடமாக இருந்தது.

ஆசாத் நோட்டமிட்டு வந்து வேண்டாம் போய்விடலாம் என சொல்லிவிட்டார். அங்கு நாம் கொள்ளையிடும் பொருட்கள் இருக்குமா என உறுதியாக தெரியாத நிலையில் அப்பாவி உயிர்கள் பல பலியாவது சரியாக இருக்காது- விட்டுவிடலாம் என புரியவைத்தார் ஆசாத். ஏதாவது எடுத்து வா என பகவான்தாஸை அனுப்பினார். அவர் நெய்யுடன் மண்விளக்கு ஒன்றை எடுத்து வந்தார் . நெய்யை வழித்து சாப்பிடு. இன்று யார் முகத்தில் விழித்தாய் என்றார் ஆசாத். பகவான் உடனே ஆசாத் முகத்தில்தான் என்றார். அவ்வளவு உளவியல் நெருக்கடியான தருணங்களிலும் தோழர்கள் நிதானமாக முடிவெடுத்தனர்- கேலி பேசி மகிழ்ந்தனர்.

ஆக்ரா திரும்பிய நண்பர்கள் ஆசாத், பகத்சிங், சுக்தேவ், பதுகேஸ்வர் தத், சிவ வர்மா தங்கள் விதி எப்படிவேண்டுமானாலும் முடியலாம் என்பது குறித்து உரையாடத்துவங்கினர். அப்போது அவர்கள் தங்கள் கற்பனையை பேசினர். ஆசாத் ஏதாவது பார்க்கில் நிலவை வெறித்து பார்த்துக்கொண்டிருப்பார். போலீஸ் வருவார்கள். சற்று இருங்கள் நிலவின் அழகைப் பாருங்கள் எனச் சொல்லி பின் கைதாகலாம்.

பகத்சிங்கும் பிஜய் சின்ஹாவும் தியேட்டரில் படம்பார்க்கும் போது போலிசிடம் மாட்டுவர். படம் முடியட்டும் போகலாம் என்பர்.

ஆசாத் உங்களுக்கு இரட்டை கயிறுதான். ஒன்று கழுத்துக்கு மற்றது இடுப்புக்கு என பகத்சிங் கிண்டல் செய்வார். ஆசாத் நிச்சயம் உனக்குத்தான் தூக்கு என்பார். என்னிடம் துப்பாக்கி எப்போதும் இருக்கும் என்னை தொடமுடியாது என்பார் ஆசாத். ராஜ்குருவிற்கு பிரச்சனையே இல்லை. அவர் தூங்கும்போதுதான் பிடிபடுவார். விழித்துப் பார்த்தால் அவர் லாக்கப்பில் இருப்பார் என சொல்லி நண்பர்கள் சிரிப்பர். அவர்களது வாழ்க்கை எப்படியெல்லாம் முடியலாம் என்பது குறித்த விழிப்புணர்வு அவர்களிடம் இருந்துள்ளது என்பதை இவ்விளையாட்டுப்போக்கான உரையாடல்கள் நமக்கு உணர்த்துகின்றன.

1929 மார்ச்சிற்குப்பின் ஆக்ராவிலிருந்து ராஜ்குரு புனே சென்றதாக சொல்லப்படுகிறது. அவர் எங்கிருந்தார் என்பதை சரியாக சொல்லமுடியவில்லை என்கிறார் ஆய்வாளர் அனில் வர்மா. அவர் தனது உறவுக்கரார்கள் வீட்டிற்கெல்லாம் சென்றதாகவும் பதிவுகள் உள்ளன. இக்காலத்தில் அவர் சிகரெட் பிடிக்க பழகிக்கொண்டுள்ளார்.

மத்திய சட்டமன்றத்தில் பிரிட்டிஷ் அரசாங்கம் public safety Bill, Trade Disputes Bill கொணர்ந்தது. தொழிற்சங்க நடவடிக்கைகளை முடக்குவது என்பதை ஏற்கக்கூடாது. நாட்டுமக்களுக்கு உணர்த்தும் வகையில் சட்டமன்றத்தில் குண்டு வீசலாம் என பகத்சிங் முன்மொழிந்தார். பார்வையாளர் காலரியிலிருந்து டிரஷரி பெஞ்ச் நோக்கி எறியலாம் என்றார். அதிருப்தியை காட்டும் அடையாளமாக அது அமையும் என எடுத்துரைத்தார். HSRA சார்பில் துண்டறிக்கை வீசிவிட்டு கைதாகிவிடலாம் என்பது அவரின் யோசனை. மத்தியகமிட்டி ஏற்றது. ஆனால் பொறுப்பு எவருக்கு என்பதில் உடன்பாடில்லாமல் இருந்தது.

ஆங்கில அறிவு, சோசலிச கருத்துக்கள், எதையும் திறம்பட விளக்கும் ஆற்றல் தனக்கு இருப்பதால் பகத்சிங் தானே அதை செய்யவேண்டும் என்றார். பகத்சிங்கின் முக்கியத்துவம் இக்காரணங்களால்தான் கூடுதலாக தேவைப்படுகிறது என நினைத்தார் ஆசாத். எனவே பகத்சிங் இருக்கட்டும், பதுகேஸ்வர் செய்யட்டும் என்றார். சுக்தேவ் வற்புறுத்தலால் மத்திய கமிட்டி மறுமுறை கூடி விவாதித்து பகத்சிங் பெயரையும் பொறுப்பிற்கு இணைத்துக்கொண்டது. சிவ வர்மா, ஜெயதேவ் தவிர

மற்றவர் டெல்லி செல்லட்டும்- ஆசாத் ஜான்சியில் இருப்பது என முடிவானது.

தனது புரட்சிகர போட்டியாளர் பகத்சிங்கிற்கு வாய்ப்புகிடைத்து தனக்கு கிடைக்கவில்லை என்பதில் ராஜ்குரு வருத்தமுற்றார். எப்போதும் பகத்சிங்கிற்கு முந்திய தியாகியாக தான் இருக்கவேண்டும் என அவர் விழைந்தார். தூக்குமேடை தருணமாக இருந்தாலும் நான் முதலில் அடுத்துதான் பகத்சிங் என்பார். ஹிந்தியில் பேசினால் தப்பாகிவிடுமா- இங்கிலீஷில்தான் பேசவேண்டுமா என்பது ராஜ்குருவின் வாதம். அப்படியே இங்கிலீஷில்தான் என கட்சி முடிவெடுத்தால் மனப்பாடம் செய்தாவது பேசிவிடுவேன் என்றார் . ஆசாத் துண்டு காகிதத்தில் தத்திற்கு பதில் ராஜ்குரு தகுதியானவர் என பகத்சிங் கருதினால் முடிவெடுக்கலாம் என எழுதித் தந்தார்.

ராஜ்குருவும் ஆசாத் கொடுத்ததை பகத்சிங்கிடம் கொடுத்து தான் வரவிரும்புவதை தெரிவித்தார். தியாகத்தில் உனக்கு பின்னர் என்பதை நான் விரும்பவில்லை என வெளிப்படையாக தெரிவித்தார். மேலும் பகத்சிங் போன்ற பெருமைக்குரிய ஒருவர் மேலும் சில ஆண்டுகள் நாட்டுப்பணி ஆற்ற இருக்கவேண்டும் என்றார் ராஜ்குரு. பகத்சிங் எரிச்சல் அடைந்தாலும் ராஜ்குருவின் நேர்மையை பாராட்டினார். நாளை மறுநாள் செய்யவேண்டிய செயலை திடீர் என எப்படி மாற்றுவது மத்திய கமிட்டி எப்படிகூடும் என பகத்சிங் நிலைமையை எடுத்துரைத்தார். ராஜ்குரு ஏற்காமல் நிராசை அடைந்தார் என அறியமுடிகிறது.

## 5

ராஜ்குரு மே 2 1929ல் ஆசாத்தை பார்க்க ஜான்சி வந்தார். முன்னதாக ஏப்ரல் 8 1929அன்று பகத்சிங்கும் பதுகேஸ்வர் தத்தும் சட்டமன்றத்தில் குண்டு வீசினர். அவர்கள் பெயர் விடுதலை இயக்க போராளிகளிடம் நட்சத்திரமாக மின்னத்துவங்கியது.

ஹோலிப்பண்டிகையையொட்டி விருந்து ஒன்றிற்கு வைஸ்ராய் அரசு செயலர்கள் வருகிறார்கள் என செய்தி அறிந்து அதற்குரிய திட்டம் தேவை என தோழர்கள் சிந்தித்தனர். இதில் ராஜ்குரு ஜெய்தேவ் இணைந்து செயல்படுவதற்கு ஆசாத் அனுமதி தந்தார். வைஸ்ராயை சரியாக அடையாளம் கண்டுகொள்வது என்பதற்கான முயற்சியில் இக்குழு

இறங்கியது. மார்ச் 25 1929 அன்று வைஸ்ராய் இல்லம் அருகே மூவரும் கூடினர். இரண்டு குண்டுகள் வீசுவது என தீர்மானித்துக்கொண்டனர். ரிவால்வாரும் வைத்துக்கொண்டனர். ராஜ்குருவிற்கு வைஸ்ராயை சரியாக அடையாளம் காட்டவேண்டும் என்கிற பணிகொடுக்கப்பட்டது.

மிகுந்த பாதுகாப்பு வளையங்களுடன் வைஸ்ராய் கார் வந்தது. ராஜ்குரு சிக்னல் கொடுக்கவில்லை. சிவ வர்மா மற்றும் கபூர் குழப்பம் அடைந்தனர். அவர்கள் பக்கம் கார் நெருங்கியவுடன் உள்ளே பெண்கள் மட்டுமே இருந்தது தெரியவந்தது. ராஜ்குருவின் சமயோஜிதம் பாராட்டப்பட்டது. அப்பாவி உயிர்கள் பலியாகக்கூடாது என்பதில் அவர்கள் எப்போதும் விழிப்புடன் இருந்துள்ளனர். பெண்கள் வந்து உன்னிடம் மாஜிக் நடத்திவிடுகின்றனர் என நண்பர்கள் கேலி பேசினர்.

1929 ஏப்ரலில் அசெம்பிளி குண்டு வீச்சு நிகழ்வில் தோழர்கள் பகத்சிங் பதுகேஸ்வர் அங்கேயே சரண்டர் ஆயினர். தொடர்ந்து குண்டு தொழிற்சாலை' ரைடு நடந்தது. ஏப்ரல் 15 1929ல் சுக்தேவ் , கிஷோரிலால், ஜெய்கோபால் கைது செய்யப்படுகின்றனர். ராஜ்குரு காசி செல்கிறார். ஆசாத் ஜான்சியில் தங்குகிறார். மே 2 அன்று ஆசாத் தங்கியிருந்த இடத்திற்கு ராஜ்குரு, சிவ வர்மா, வைசம்பாயன், பகவான்தாஸ் வருகின்றனர். பகத்சிங்- பதுகேஸ்வர் போட்டோ வெளியிட்ட தினசரி ஒன்றை சிவவர்மா எடுத்துவருகிறார். பேப்பரை விரித்து காண்பிக்கும்போது ஒருவர் காலால் தாண்டி வருகிறார். ஆசாத் கடுங்கோபத்துடன் இவர்கள் தியாகிகள் ஆகப்போகிறவர்கள். நம்மைவிட உயர்ந்தவர்கள் தாண்டக்கூடாது என்று கண்டிக்கிறார். தேசபொக்கிஷம் , வழிபாட்டிற்குரியவர்கள் அவர்கள் என்றார் ஆசாத்.

மறுபடியும் வைஸ்ராய் மீது குண்டு வீசுதல் குறித்த விவாதம் வருகிறது. ஆசாத் போதும் எனது தோழர்களை நான் பலிகொடுக்க விரும்பவில்லை. பழகிய தோழர்களை பலிகொடுத்து, புதிய தோழர்களை பலி கொடுப்பதற்காகவே சேர்த்து அவர்களுக்கு தலைவனாக இருப்பதில் எனக்கு விருப்பமில்லை என மிகுந்த வருத்தத்துடன் ஆசாத் பேசினார்.

சுரேந்திரநாத் பாண்டே என்கிற தோழர் போலீசார் ஆசாத் ஜான்சியில் இருப்பதை அறிந்துவிட்டனர் என்கிற தகவலை கொணர்ந்தார். பல இடங்களில் சோதனை நடந்துவருகிறது என்றார் . இச்செய்தி வந்தவுடன் ஆசாத் உடன் வெளியேறவேண்டும் என தோழர்கள் சொல்கின்றனர்.

தலைமைக்கு அது பண்பல்ல. தோழர்கள் பகவான் தாஸ், சதாசிவ் இருவர் தவிர மற்றவர்கள் உடன் வெளியேறுங்கள் என்கிறார் ஆசாத். ராஜ்குரு சிவவர்மா உள்ளிடோர் வெளியேறுகின்றனர். அப்போது ஆசாத்திடம் இறுதியாக விடைபெறுகிறோம் என்பதை ராஜ்குரு அறிந்திருக்க வாய்ப்பில்லை. ஆசாத் கவனமாக தப்பி செல்லவேண்டும் என்கிற பதைப்பு இருந்திருக்கலாம்.

அமராவதியில் செயல்பட்டு வந்த ஹனுமான் பிரசாரக் மண்டலுக்கு ராஜ்குரு சென்றிருக்கலாம் என ஊகிக்கிறார் அனில் வர்மா. ராஜ்குரு நாக்பூர், வார்தா என அலைந்ததாகவும் தகவல் சொல்லப்படுகிறது.

பகத்சிங், தத் வழக்கு கோர்ட்டில் நடந்துகொண்டிருந்தது. ஜெயகோபால், ஹன்ஸ்ராஜ் வோரா அப்ரூவர் ஆயினர். அவர்களுக்கு 'எம்' என்கிற கோடுடன் கூடிய மராட்டிய இளைஞன் சாண்டர்ஸ் கொலையில் தொடர்புடையவன் என்கிற துப்பு கிடைத்தது. புனேவில் தங்கியிருந்த ராஜ்குரு சில பால்ய நண்பர்களிடம் சாண்டர்ஸ் கொலை சாகசம் பற்றி பேசினார். அவர்கள் புனே விட்டு உடன் போய்விடு என்று சொன்னதை ராஜ்குரு பொருட்படுத்தவில்லை.

ஒருமுறை சகோதரர் திங்கர், தாயார் இருவரும் ராஜ்குரு 'கோட்பாக்கெட்டில்' துப்பாக்கி இருப்பதை பார்த்தனர். பண்டிட் குடும்பம் புத்தகம் வைத்திருக்கும், நீ துப்பாக்கி வைத்துள்ளாய் என துருவிக் கேட்கலாயினர். நமது மதத்திற்கோ, நாட்டிற்கோ ஆபத்து எனில் ஆயுதம் தான் சரியான பதில் என ராஜ்குரு சொல்கிறார். விஷ்ணு சகஸ்ரநாமத்தில் கூட 'சதாநேரமும் ஆயுதம் தரித்தவரே' என அவரை புகழ்ந்து நாம் பாடவில்லையா என வினவுகிறார். சாண்டர்ஸ் வழக்கில் நான் தூக்குக் கூட ஏற்றப்படலாம். உன்னிடம் முன்பே நான் சொல்லிவிட்டேன், உனது ஒருமகன் நாட்டிற்காக தியாகம் செய்பவன் என தாயிடம் உண்மையை சொல்லி சமாதானப்படுத்தினார்.

செப்டம்பர் 27, 1929ல் சிவராம் பரஞ்சபே என்கிற பத்திரிகை ஆசிரியரின் மறைவு ஊர்வலத்தில் ராஜ்குரு பங்கேற்றதுடன் ஏகாதிபத்தியம் வீழட்டும், புரட்சி ஓங்கட்டும் என முழக்கமிட்டார். சுற்றி கண்காணிப்பிற்கு இருந்த உளவுத்துறையினரின் சந்தேக நிழலில் சிக்கினார். இடையில் அவர் போலீஸ் ஏஜேண்ட் கேஸ்கர் என்பவருடன் பழகலானார். அவரிடம் பம்பாய் கவர்னரை சுடவேண்டும் என ராஜ்குரு

விவாதித்து வந்தார். கேஸ்கரும் ரேஸ் கோர்ஸ் பகுதிக்கு கவர்னர் வருவதான தகவலை ராஜ்குருவிடம் கசியவிடுகிறார். சதி அறியாமல் அங்கு செல்கிறார் ராஜ்குரு. போலிசாருக்கு அடையாளம் காட்டவேண்டிய ஜெயகோபாலுடன் போலீஸ்படை காத்திருக்கிறது. அப்ரூவரான ஜெயகோபாலும் ராஜ்குருவை காட்டிக்கொடுக்கிறார். போலீசார் கைது செய்ய அவசரம் காட்டவில்லை.

சவர்கனோகர் ராஜ்குருவிடம் கேஸ்கர் குறித்த தன் சந்தேகங்களை தெரிவித்து எச்சரிக்கை தேவை என பலமுறை அறிவுறுத்தியிருந்தார். ராஜ்குரு காதில் வாங்கிக்கொள்ளவில்லை. தான் பெரும் துப்பாக்கி தொழிற்சாலையுடன் தொடர்பு கொண்டுள்ளேன் என்கிற பெருமையை ராஜ்குரு வெளிப்படுத்திகொண்டிருந்தார். இரவு ஒரு மணி அளவில் கேஸ்கர் கொடுத்த சிக்னல் அடிப்படையில் ராஜ்குரு உறக்கத்தில் இருந்தபோது கதவு தட்டப்படுகிறது. உடன் இருந்த சவர்கனோகர் திறக்கிறார். போலீஸ்படை துணை கண்காணிப்பாளர் தலைமையில் இருவருக்கும் விலங்கிடுகிறது. ராஜ்குரு ஏகாதிபத்தியம் வீழட்டும், புரட்சி ஓங்கட்டும் என முழக்கமிடுகிறார். புனேயின் திலக் சாலை விழித்துக் கொள்கிறது. புனே நகரில் ராஜ்குரு நண்பர்கள் என அறியப்பட்ட பல்வந்த் கரந்திகார் வீட்டில் சோதனை நடந்து ரிவால்வர்கள் எடுக்கப்படுகின்றன.

அக்டோபர் 1, 1929 அன்று சகோதரர் திங்கர் கைதாகியிருப்பது ராஜ்குருதான் என ஏற்கிறார். ராஜ்குருவிடம் கட்டைவிரல் 'இம்ப்ரஷன்' கோருகிறார்கள். நீங்கள் கட்டாயப்படுத்திதான் எடுத்துக்கொள்ளவேண்டும் என்கிறார். சையத் அகமத் ஷா எனும் துணைகண்காணிப்பாளர் படைதான் அவரை பிடித்தது. விழிப்புடன் லாகூர் அழைத்து செல்லும் பொறுப்பும் அவருக்கே கொடுக்கப்பட்டது. ராஜ்குரு லாகூர் சென்றபோது பகத்சிங் மற்றும் தோழர்கள் சிறையில் பட்டினிப்போரில் இருந்தனர்.

அக்டோபர் 3 1929ல் ராஜ்குரு லாகூர் கண்டோன்மெண்ட் மாஜிஸ்ட்ரேட் இல்லத்தில் ஆஜர்படுத்தப்பட்டார். மாஜிஸ்ட்ரேட் 'ராஜ்குரு என்ற பெயர்வைத்துக்கொண்டு' என ஆரம்பத்தவுடனேயே ஆமாம் அரசர்களின் குரு- ஆள்பவர்க்கு பாடம் சொல்லித்தருபவன் என தைரியமாக பதில் தருகிறார் ராஜ்குரு. தனி சிறையில் அவரை

அடைக்கின்றனர். தனது தோழர்களுடன் இல்லாமல் தனித்து என்பதில் ராஜ்குருவிற்கு வருத்தம் ஏற்பட்டது.

அக்டோபர் 5 அன்று தோழர்கள் பட்டினிப்போரை முடித்துவிட்டனர் என்கிற செய்தி கிட்டியவுடன்தான் ராஜ்குருவும், சவர்கனோகரும் 5 நாட்கள் பட்டினிக்கு பின்னர் உணவு எடுத்துக்கொள்கின்றனர். பகிர்சந்த் மற்றும் கான்ஸ்டபிள் இப்ராகிம் இருவரும் ராஜ்குரு சாண்டர்சை சுட்டதற்கான சாட்சிகள் என்கிற வகையில் அடையாளம் காட்டினர். சவர்கனோகர் ராஜ்குருவின் நண்பர், உடன் தங்கியவர் என்பதை தாண்டி சாண்டர்ஸ் வழக்கில் அவருக்கு நேரிடை தொடர்பேதும் இல்லை எனத் தெரிந்தவுடன் அவர் புனே எரவாடா சிறைக்கு அனுப்பப்படுகிறார்.

லாகூர் சதிவழக்கு மத்திய சிறைச்சாலை பகுதியில் ராய் சாகேப் பண்டிட் கிருஷ்ணா சிறப்பு நீதிபதி தலைமையில் நடக்கத்துவங்கியது. ராஜ்குரு கோர்ட்டிற்கு அக்டோபர் 17 1929ல் அழைத்துவரப்படுகிறார். முதல் அடி எடுத்துவைத்தவுடன் இன்குலாப் ஜிந்தாபாத் என்கிறார். தோழர்கள் உற்சாகமாக திரும்ப முழங்குகின்றனர். அக்டோபர் 19 அன்று நேதாஜி சிறையில் உள்ள இளம் வீரர்களை காண வருகிறார். மூன்று மணிநேரம் போராடியும் மாஜிஸ்டிரேட் நேதாஜியை அனுமதிக்கவில்லை. பகத்சிங் நீதிநிர்வாகம் பாரபட்சமாக நடந்துகொள்வதாக புகார் எழுப்பினார். எப்போதெல்லாம் அவர்கள் நீதிமன்றம் அழைத்துவரப்பட்டார்களோ அப்போதெல்லாம் விடுதலைக்கான புரட்சிகர பாடல்களை பாடினர். முழக்கமிட்டனர்.

அப்ரூவர் ஜெயகோபால் அக்டோபர் 21 1929ல் அழைத்துவரப்பட்டபோது அவர்மீது செருப்பு வீசப்பட்டது. வீசியவர்க்கு மூன்றுமாத சிறைக்கொடுமையை தந்தது நிர்வாகம். புரட்சியாளர்கள் கைவிலங்கிடப்பட்டு அழைத்துவரப்பட்டனர். கைவிலங்கிட்டால் கோர்ட் பகிஷ்காரம் என பகத்சிங், சுக்தேவ் அறிவித்தனர். அவர்களை கட்டாக தூக்கி வேனில் ஏற்றித்தான் போலீசால் கொண்டுசெல்ல முடிந்தது.

பகத்சிங், ராஜ்குருவிற்கு கொடுமைகள் அதிகமாக நடக்கத்துவங்கின. போலீசாரை கொடுமையாக நடக்கும்படி நீங்களே உத்தரவிடுகிறீர்களே மாஜிஸ்ட்ரேட் என பகத்சிங் நேரிடையாக கேட்டார். இதுதான் உங்கள் 'decent behaviour ஆ' என்றார். போலீஸ் அராஜகம் அறிந்து அதைக்

கண்டிக்கும் வகையில் லாகூரில் பொதுக்கூட்டம் நடத்தப்பட்டது. அக்டோபர் 25 அன்று ராஜ்குரு மற்றும் மகாவீர் சிங் போன்ற தோழர்கள் கருணையற்ற போலீஸ் தாக்குதலால் மூர்ச்சையாயினர். கோர்ட் விசாரணை காலத்தில் மோதிலால்நேரு, சுபாஷ், ரபிஅகமத் கித்வாய், பாபா குர்தித் சிங், கே எஃப் நரிமன் பங்கேற்றது தோழர்களுக்கு ஆறுதலாக இருந்தது.

நீதிமன்ற நடவடிக்கைகளில் கூடுதல் கவனம் செலுத்தியவர் பகத்சிங். ராஜ்குரு வழக்கம்போல் அதிகாரிகளை கேலி செய்து குறும்பு செய்பவராக இருந்தார். இந்தி, ஆங்கிலம் இரண்டும் தெரியாது- மராத்தி மொழிபெயர்ப்பாளர் வேண்டும் என்றார். அரசாங்கம் அவரது கோரிக்கையை ஏற்று அமர்த்தியது. ராஜ்குரு அடிக்கடி தன்நிலை மறப்பார். அப்படி ஒருநாள் கோர்ட் வளாகத்திலேயே நண்பர் ஒருவரை பார்த்தவுடன் ஆங்கிலத்தில் பேசத்துவங்கிவிட்டார். நியாஸ் அகமது என்கிற உளவுத்துறை அதிகாரி இதைப் பார்த்தார். ராஜ்குருக்கு ஆங்கிலம் இந்தி தெரிவதை கோர்ட் அறிய ஏற்பாடு செய்தார் அந்த போலீஸ் அதிகாரி.

பப்ளிக் பிராசிக்யூட்டர் வாதாடும் நேரத்தில் ராஜ்குரு பற்களை கடித்து சத்தம் ஏற்படுத்தினார். நீதிபதி கண்டித்தபோது மொழி புரியவில்லை- என்ன செய்வது என்றார்.

சீனியர் பாரிஸ்டர் லாலா துனிசந்த் பகத்சிங்கின் வழக்கறிஞர். ஒருமுறை அவரை கோர்ட் உள்ளே அனுமதிக்கமுடியாது என்ற நிலை எடுத்தபோது புரட்சிகர தோழர்கள் ஜனவரி 29 1930ல் நீதிமன்ற நடவடிக்கைகளை புறக்கணித்தனர். பட்டினிப்போராட்டம் துவங்கினர். முதல் 13 நாட்களில் ராஜ்குரு எடை 21 பவுண்ட் வீழ்ந்தது. தண்ணீர் வற்றி முகம் வீங்கியது. தொண்டை, மூக்கில் இரத்தக் கசிவு ஏற்பட்டது. மருத்துவர்கள் ட்யூப் வழியே பால் கொடுக்க முயற்சித்தனர். அவருக்கு நுரையீரல் பாதிப்பு உருவானது. இந்த தளர்ச்சியான சூழலிலும் அவர் சிவவர்மாவிடம் 'சக்சஸ்' என்றார்.

பிப்ரவரி 19 அன்று சிவ வர்மா, ராஜ்குரு உடல் நிலை மிகவும் மோசமாக இருப்பதாக மருத்துவர் அறிக்கை கொடுத்தார். பஞ்சாப் கவர்னரும் லாகூர் சதிவழக்கு விசாரணை கைதிகள் உடல்நலம் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளனர் என்கிற தந்தியை வைஸ்ராய்க்கு

அனுப்பினார். சிறை விதிகளில் மாற்றம் தேவை எனக் குறிப்பிட்டார். வைஸ்ராய் இர்வின் லண்டனில் உள்ள இந்திய செயலருக்கு கட்டாய உணவு செலுத்துதல் ஆபத்தில் முடியும். ராஜ்குரு மிக மோசமான நிலையில் இருக்கிறார் என்ற செய்தி அனுப்பினார். சிறை விதிகளில் திருத்தம் வேண்டும் என வேண்டினார்.

பாபுராவ் பட்வடேகர் மூலம் ராஜ்குரு தாயாருக்கு செய்தி போனது. பார்வதி தேவியும் மகனை பார்க்க கிளம்பினார். சகோதரர் திங்கர் விரும்பவில்லை. சகோதரி கோதாவரி தாயுடன் வந்தார். இருவரும் பகத்சிங் குடும்பத்தாருடன் தங்கி தோழர்கள் அனைவரையும் பார்த்துச் சென்றனர். பிறகு பட்வடேகர் வீட்டில் தங்கினர். அவர் அரசாங்க ஊழியராக இருந்தும் இரு பெண்களையும் தங்கள் வீட்டில் தங்க வைத்தார்.

ராஜ்குரு நிலையைப் பார்த்து தாயார் கண்ணீர்விட்டார். பகத்சிங் பாலை கையில் வைத்துக்கொண்டு ராஜ்குருவை எடுத்துக்கொள்ள மன்றாடினார். 'இரு பகத்சிங் நான் முன்னே போய் உனக்கும் ரூம் போடுகிறேன்' என்ற பாணியில் ராஜ்குரு பேசியது அனைவர் முகத்திலும் சிறு புன்முறுவலையும் வேதனையும் கொடுத்தது.

பார்வதிதேவி ராஜ்குருவிற்கு மட்டுமல்லாது பகத்சிங் உள்ளிட்டவருக்கு உணவு எடுத்துக்கொண்டு போவார். பகத்சிங் அவருக்கு ஆறுதல் தருவார். பகத்சிங் இறந்தாலும் ராஜ்குரு இருப்பார் கவலைப்படாதீர்கள் என்பார் பகத்சிங்.

மே 1 1939 அன்று சிறப்பு டிரிப்யூனலுக்கு வைஸ்ராய் இர்வின் உத்தரவிட்டார். லாகூர் வழக்கில் 607 சாட்சிகள் என சொல்லப்பட்டது. 8 மாதங்களில் 228 பேர் மட்டுமே விசாரிக்கப்பட்டிருந்தனர்.

முன்னதாக செப்டம்பர் 12 1929 அன்று குற்றம் சாட்டப்பட்டவர்கள் காரணமின்றி வராத நிலையிலும் விசாரணையை நீதிபதி தொடரலாம் என்ற சட்டம் போட்டனர். மோதிலால், ஜின்னா உள்ளிட்டோர் இதை எதிர்த்தனர்.. டிரிப்யூனல் லாகூர் நீதிபதிகளை கொண்டு அமைக்கப்பட்டது. கோல்ட்ஸ்டிரீம் ஐ சி எஸ் தலைவராக பஞ்சாப் உயர்நீதிமன்றத்தால் நியமிக்கப்பட்டார். நீதிமான்களாக ஆகா ஹைதர் மற்றும் ஜி சி ஹில்டன் நியமிக்கப்பட்டனர். டிரிப்யூனலுக்கு சில சிறப்பு அதிகாரங்கள் தரப்பட்டன. தீர்ப்பு இறுதியானது. உயர்நீதிமன்றம் கூட போகமுடியாது. வழக்கு விசாரணை நிமித்தம் எந்த உத்தரவையும் சிறப்பு நீதிமன்றம் வெளியிடலாம். உயர்நீதிமன்றம் கூட அதை எதிர்க்க முடியாது..

பாட்டியாலா அரண்மனையின் பகுதியான பூன்ச் ஹவுஸ் நீதிமன்றமானது. மே 5 1930 அன்று பகத்சிங் மற்றும் 17 தோழர்கள் காலை 10 மணி அளவில் கோர்ட் வளாகத்திற்கு கொணரப்பட்டனர். பகத்சிங் வழக்கில் மிக முக்கிய பங்காற்றியபோதும் சிறப்பு நீதிமன்றம் சட்டத்திற்கு புறம்பானது என்கிற முதல் தாக்குதலை ராஜ்குரு தந்தார். வைஸ்ராய்க்கு அத்தகைய அதிகாரம் உண்டா என்பது முதலில் வழக்காகட்டும் என்றார். இதற்கு பகத்சிங் ஆதரவு குரல் கொடுத்தார். இது அரசாங்கமே இல்லை.. இரத்தம் உறிஞ்சும் அட்டை. சிலருக்காக நடைபெறுவது எப்படி அரசாகும் என மராத்தியில் ராஜ்குரு பேசினார். மராத்தியில் பேசியதற்கு பப்ளிக் பிராசிக்யூட்டர் எதிர்ப்பு தெரிவித்தார். நீதிமான்கள் ஏற்கவில்லை. வசுதேவ் என்பார் மொழிபெயர்ப்பாளர் ஆனார். உங்களுக்கு அரசாங்க செலவில் வாதாட வக்கீல் வேண்டுமா என கேட்கப்பட்டதற்கு தேவையில்லை என பெரும்பாலானவர் கூறினர். பகத்சிங் லாலா துனிசந்த் வேண்டும் என்றார். நீதிமன்றம் ஏற்றது.

சையத் அகமத் டி எஸ் பி ராஜ்குரு தன்னுடன் இந்தி, ஆங்கிலத்தில் உரையாடினார் என சாட்சியம் கூறினார். அவர் திங்கருடன் பேசியபோதும் ஆங்கிலத்தில் பேசியதாக இன்ஸ்பெக்டர் மில்ஸ் தெரிவித்தார். பக்ஷி தீனநாத் ராஜ்குரு உருது கூட பேசியதாக தெரிவித்தார். இவ்வாறு சாட்களின்படி அவருக்கு இந்தி, ஆங்கிலம், உருது, சமஸ்கிருதம் மற்றும் தாய்மொழி மராத்தி தெரிந்தவை என உறுதிப்படுத்தப்பட்டது. தோழர்கள் இன்குலாப் ஜிந்தாபாத் என முழங்கியதில் எரிச்சல் அடைந்த நீதிபதி அவர்களை முழந்தாளிட்டு நிற்கச் சொன்னார்.

மே 12 1930 அன்று பாடல்களை பாடியவர்களை நீதிபதி சிறைக்கு சென்று ஒடுக்கக்கோரினார். கடுமையாக தோழர்கள் தாக்கப்பட்டனர். மே 13 அன்று விசாரணைக்கு ஒத்துழைக்க முடியாதென்றனர் தோழர்கள். நீதிமான் ஆகா ஹைதர், கோர்ட்டிலிருந்து சிறைக்கு வெளியேற்றியதை ஏற்க இயலாதென்றார். ஆகா ஹைதர் இடையூறு செய்கிறார் என வைஸ்ராய்க்கு கோல்ட் ஸ்ட்ரீம் செய்தி அனுப்பினார். ஜூன் 30 1930 அன்று வைஸ்ராய் சிறப்பு நீதிமன்றத்தை மாற்றி அமைத்தார். ஹில்டன் தலைவராகவும் நீதிபதிகள் அப்துல் காதர், ஜே கே தாப் உறுப்பினர்களாகவும் அமர்த்தப்பட்டனர்.

ஜூன் 24, 1930 அன்று ஹில்டன் தொடர்கிறார். அவருக்கு முன்பிருந்த டிரிப்யூனல் செய்த தவறு தெரியும் - எனவே மன்னிப்பு தெரிவிக்கவேண்டும் என்றார் பகத்சிங். இல்லையெனில் வரப்போவதில்லை என்றார். அவர்கள் நீதிமன்றத்தில் இல்லாமலேயே வழக்கு நடந்தது. அவர்கள் இல்லாமல் 432 சாட்கள் விசாரிக்கப்பட்டிருந்தனர்.

சுரேந்திரநாத் பாண்டே, பதுகேஸ்வர் தத் ஆகியோர் போதுமான ஆதாரங்கள் இல்லையென விடுவிக்கப்பட்டனர். தத் அசெம்பிளி வழக்கில் ஆயுள் தண்டனை அனுபவித்து வந்தார். தோழர்கள் பகத்சிங், சுக்தேவ், ராஜ்குரு, சிவ வர்மா, கயாபிரசாத், ஜே என் சன்யால், பிரேம் தத், கிஷோரிலால், மகாவீர்சிங், அஜாய் கோஷ், விஜய்குமார் சின்ஹா, கந்தன்லால், திவாரி போன்ற 15 தோழர்கள் கொலை, கொள்ளை, சட்டப்பிடியில் இருந்தவர்களை மீட்டு போவது போன்ற பல்வேறு வழக்குகளுக்குரிய செக்ஷன்களில் விசாரணைக்குள்ளாயினர்.

ராஜ்குருவிற்கு வழக்கின் விவரம் அனுப்பிவைக்கப்பட்டது. அவர் ஏற்கவில்லை. ஜூலை 1930ல் ஆசாத் பகத்சிங்கை காப்பாற்ற எடுத்த முயற்சி பலனளிக்கவில்லை. பகத்சிங் வீரமரணத்தை தழுவலாம் என்ற மனநிலையில் இருந்தார். வைசம்பாயன் ஃப்ளூட் சிக்னல் கொடுத்தும் மறுமொழி தராமல் இருந்தார் பகத்சிங். ஆசாத் மனம் நொந்தார்.

பகத்சிங்குடன் இருந்து அப்ரூவர்களாக மாறிய ஜெய்கோபால், ஹன்ஸ்ராஜ் வோரா ஆகியோரிடமிருந்து பெற்ற விவரங்களைக்கொண்டே வழக்கு நகர்ந்தது. அவர்கள் HSRA நடவடிக்கைகளை அறிந்தவர்கள் மட்டுமல்ல, சாண்டர்ஸ் கொலையின்போதும் உடன் இருந்தவர்கள். எனவே அவர்களிடமிருந்து பெறப்பட்டவை முக்கிய ஆதாரங்களாயின. குற்றப்பத்திரிகை தாக்கல் செய்யப்பட்டபின் புரட்சியாளர்கள் இல்லாமலே 432 சாட்சிகளை 45 நாட்களில் விசாரித்த பதிவை செய்தனர். மிக முக்கிய சாட்சியான டிராபிக் இன்ஸ்பெக்டரால் பகத்சிங், ராஜ்குருவை அடையாளம் கூட காட்ட இயலவில்லை. சாண்டர்ஸ் உடலை பிரேத பரிசோதனை செய்த சிவில் சர்ஜனின் அறிக்கை ராஜ்குருவை உறுதி செய்தது. கான்ஸ்டபிள் சன்னன் சிங் உடலில் இருந்தது ஆசாத் சுட்டது. ராஜ்குருவிற்கான ஆதாரம் ஒரே ஒரு புல்லட்தான்.

மீண்டும் பகத்சிங் மற்றும் தோழர்கள் பட்டினிப்போரில் ஈடுபட்டனர். நீதிபதி ஹில்டன் சிறை வசதிகளை அதிகப்படுத்துக என உத்தரவிட்டதால் பட்டினிப்போரை செப்டம்பர் 1 1930ல் முடித்துக்கொண்டனர்.. தொடர்ந்து நீதிமன்ற புறக்கணிப்பை தோழர்கள் செய்தனர். அரசுத்தரப்பு தனது வாதங்களை செப்டம்பர் 10 1930 உடன் நிறுத்திக்கொண்டது. நீதிமன்றம் அக்டோபர் 8வரை வழக்கு விசாரணையை ஒத்திவைத்தது.

இதனிடையில் பகத்சிங் தந்தை சர்தார் கிஷன் சிங் டிரிப்யூனலுக்கு செப் 20 1930 அன்று மனு அளித்தார். சாண்டர்ஸ் சுடப்பட்ட அன்று பகத்சிங் கல்கத்தாவில் இருந்தததாகவும் அங்கிருந்து ராம்லால் என்கிற காதிகிராப்ட் மேனஜர் ஒருவருக்கு கடிதம் எழுதியதாகவும் தெரிவித்திருந்தார்,. அறிந்த பகத்சிங் கோபமடைந்தார் தன்னைக்கேட்காமல் இப்படி விண்ணப்பம் செய்வதற்கு தந்தைக்கு எந்த

உரிமையும் இல்லை என்று விமர்சித்தார். டிரிப்யூனல் அவ்விண்ணப்பத்தை ஏற்கவில்லை. டிரிப்யூனலுக்கு அக்டோபர் 17 வரைதான் அனுமதி இருந்தது. அதற்குள் அவர்கள் தீர்ப்பை சொல்லவேண்டும் என்ற நிலை ஏற்பட்டது. அக்டோபர் 5 1930 அன்று கான் பகதூர் அக்பர் கான் எனும் சிறை கண்காணிப்பாளர் இந்த வீர இளைஞர்களுக்கு விருந்து ஒன்றிற்கு ஏற்பாடு செய்தார். சிறை அதிகாரிகள் பிரிட்டிஷ் வீட்டு பெண்கள் உட்பட பங்கேற்க வந்தனர். அக்டோபர் 7 1930 அன்று லாகூர் உயர்நீதிமன்ற ரிஜிஸ்ட்ரார் 281 பக்க அறிக்கையுடன் வந்தார். பலத்த பாதுகாப்பு ஏற்பாடுகள் இருந்தன.

மாஸ்டர் அக்யாராம், தேஸ்ராஜ், அஜாய் கோஷ், சுரேந்திரநாத் பாண்டே விடுதலை என தெரிவிக்கப்பட்டது. விஜய் சின்ஹா, மகாவீர், கிஷோரிலால், ஜெய்தேவ் கபூர், கயா பிரசாத், சிவவர்மா , கல்நாத் திவாரி ஆகிய 7 பேருக்கும் ஆயுள் தண்டனை என்றனர். குந்தன்லால் 7 ஆண்டுகள், பிரேம் தத் 5 ஆண்டுகள் தண்டனைக்குள்ளாயினர். பகத்சிங், சுக்தேவ், ராஜ்குரு ஆகிய் மூவருக்கும் மரணதண்டனை என்பது தெரிவிக்கப்பட்டது. தோழர்கள் மூவருக்கும் நகல் வழங்கப்பட்டது. அவர்கள் கட்டித்தழுவிக்கொண்டனர். இந்தியா நீடுழி வாழட்டும் புரட்சி ஓங்குக என முழக்கம் எழுப்பினர்.

ராஜ்குருவின் தாயார் பார்வதி பட்வடேகருடன் இருந்தார். அன்று தீர்ப்பு தெரிவிக்கப்படும் நாள் என அவர்கள் அறிந்திருக்கவில்லை. வழக்கம்போல் இனிப்புடன் உணவு எடுத்து வந்திருந்தனர். தாயார் துயரத்திற்குள்ளானார். ராஜ்குரு 'மதர் இந்தியாவிற்கு' உனது ஒரு மகன் எனச் சொல்லி தேற்றினார். பேடா இனிப்பை தோழர்களுக்கு எடுத்துதரும்போது அவர் பெரிதாக அழுதார். குழந்தைகளின் துன்பத்தை தாயார் ஏற்கமுடியும் என்கிற சக்தியை எங்களுக்கு கடவுள் தந்தால் எந்த மகனும் துன்பம் அடையான் என பகத்சிங் தாயார் தெரிவித்தார்.

ராஜ்குரு கைது செய்யப்பட்ட இடத்தில் ரிவால்வரும் துப்பாக்கி ரவைகள் இருந்த பெட்டி ஒன்றும் இருந்தது என்ற சாட்சியம் அவர் துப்பாக்கி மனிதன் என்பதற்கு முக்கியமானதானது. டிரிப்யூனல் தனது தீர்ப்பாக ராஜ்குரு பொறுத்து கீழ்க்கண்ட வாக்கியங்களில் தெரிவித்தது.

Shivram Rajguru alias M is convicted under sections 121 and 302 of the Indian Penal Code. In view of his participation in the murder of Mr. Saunders, he is sentenced to be hanged by neck till he is dead"

லாகூரில் 144 தடை உத்தரவு அமுல்படுத்தப்பட்டது. அக்டோபர் 8 அன்று மாணவர்கள் போராட்டம் நடைபெற்றது. மாணவிகள் உட்பட நூற்றுக்கணக்கானவர் கைது செய்யப்பட்டனர். பேராசிரியைகள் கூட பதவி விலகினர். நவஜவான் பாரத் சபா சார்பில் கண்டன இயக்கங்கள் நடந்தன. லாலாஜியின் மகள் பார்வதி தேவி தலைமையில் காங்கிரஸ் சார்பில் கண்டன ஊர்வலம் நடந்தது. அக்டோபர் 9 அன்று மாலைவரை தவம் கிடந்தும் தாயார் பார்வதி தேவிக்கு ராஜ்குருவை பார்க்க அனுமதி தர மறுத்தனர் . இதை டிரிப்யூன் பத்திரிகை வெளியிட்டது. நாக்பூர், மதராஸ், டெல்லி, பாட்னா, கான்பூர், அலகாபாத், பனாரஸ் நகர்களில் கண்டன இயக்கங்கள் நடைபெற்றன. அமிர்தசரஸ், லாகூரில் லட்சக்கணக்கானோரிடம் கையெழுத்து இயக்கம் நடைபெற்று வீரர்களுக்கு ஆயுள் தண்டனையாக மாற்று என கோரப்பட்டது. அக்டோபர் 27 1930 தூக்கு நாளெனச் சொல்லப்பட்டதை தள்ளிப்போட்டனர்.

மோதிலால் படுத்தபடுக்கையாக இருந்தபோதும் பிரைவி கவுன்சிலுக்கு தீர்ப்பை எடுத்து சென்று நியாயம் கோரவேண்டினார். வீரர்கள் பிரைவி கவுன்சில், தண்டனையை ஆயுள்தண்டனையாக மாற்றிவிட்டால் தங்களால் தியாகம் செய்யமுடியாமல் போய்விடுமோ என கவலைகொண்டனர். அப்பீல் ஒருவகையில் நமது போராட்டத்தை உலகம் அறிய செய்யும் என பகத்சிங் கருதினார்.

பெட்டிஷனும் நவம்பர் 1930ல் அனுப்பப்பட்டது. ஐந்து நீதிபதிகள் அமர்வில் பிப்ரவரி 11 1931 அன்று பெட்டிஷன் விசாரிக்கப்பட்டது. நீதிபதிகளாக வைகவுண்ட் துனேதின், லார்டு தாக்கர்சன், லார்டு ரூசெல், சர் ஜார்ஜ் லாடெஸ், சர் டின்ஷா முல்லா இருந்தனர். குற்றவாளிகளின் சார்பில் டி என் பிரிட் வாதங்களை முன்வைத்தார். ட்ரிப்யூனல் போட்டதே சட்டத்திற்கு புறம்பானது என்றார். கவர்னர் ஜெனரலுக்கு அதிகாரம் உண்டு என இவ்வாதம் நிராகரிக்கப்ப்ட்டடது.

இதனிடையில் சுக்தேவின் உறவினர் சிந்தாராம் தாபர் அக்டோபர் 27 1930 தூக்கில் இடும் நாள் என தீர்ப்பு கொடுத்த டிரிப்யூனலின் காலமே முடிந்துவிட்டபோது எவ்வாறு நிறைவேற்ற இயலும் என லாகூர் உயர்நீதிமன்றத்தில் வழக்கு தொடர்ந்தார். உயர்நீதிமன்றம் பிரைவி கவுன்சிலுக்கு வழக்கு போயுள்ளது- அது மட்டுமின்றி பிரிவு 401 CPC படி தலமட்ட அரசாங்கம் உத்தரவை நிறைவேற்ற அதிகாரம் படைத்தது எனச் சொல்லி வழக்கை டிஸ்மிஸ் செய்தது. புதிய வாரண்ட் எதுவும் தேவையில்லை என்றது. செக்ஷன் 402 படி ஏதாவது குளறுபடிகள் உணரப்பட்டால் ஆயுள் தண்டனையும் தரமுடியும் என்பதும் தெளிவாக்கப்பட்டது.

பிப்ரவரி 19 1931 அன்று பகத்சிங்கின் தாயார் வித்யாவதி வைஸ்ராய்க்கு கருணை மனு அனுப்பினார். பகத்சிங் கடுமையான கோபமும் வருத்தமும் அடைந்தார். ஆசாத் பிப்ரவரி 27 1931 அன்று அலகாபாத் ஆல்ஃபிரட் பூங்காவில் போலீசாரால் வளைக்கப்பட்டார். போராடிப் பார்த்து முடியாத இறுதி நிலையில் தன்னையே சுட்டுக்கொண்டு மரணித்தார் . போலீசார் சுட்டுக்கொன்றதாக தெரிவித்தனர்.

பண்டிட் மதன் மோகன் மாளவியா பிப்ரவரி 14 அன்று வைஸ்ராய்க்கு கருணைகாட்டுமாறு டெலிகிராம் கொடுத்தார். பிரிட்டிஷ் நாடாளுமன்ற உறுப்பினர்களில் சிலர் ஆயுள்தண்டனையாக மாற்றக் கோரினர். பிரிட்டிஷ் கம்யூனிஸ்ட் இயக்கம் மனிதாபிமானமற்ற நீதிவிசாரணைக்கு பகத்சிங் வழக்கே சாட்சி என்று கருதியது.

காந்தியும் காங்கிரசின் தலைவர்களும் ஜனவரி 25 1931ல் தான் சிறையிலிருந்து விடுவிக்கப்படுகிறார்கள். தொடர்ந்த காந்தி இர்வின் பேச்சுவார்த்தையில் பகத்சிங் ராஜ்குரு சுக்தேவ் மரனதண்டனையில் மாற்றம் வரலாம் என எதிர்பார்ப்பு மேலோங்கியிருந்தது. காந்தி தன்னால் ஆன முயற்சிகளை செய்தார். இது குறித்து ஏராள விவாதங்கள் இன்றும் கூட நடந்துவருகின்றன. இக்கட்டுரையின் ஆசிரியர் பகத்சிங்கை காந்தி காவு கொடுத்தாரா என்கிற தனிக்கட்டுரையில் சில விவரங்களை தொகுத்து கொடுத்துள்ளார். Gandhi and Bhagat Singh by V N Datta என்கிற புத்தகம் அக்களூர் இரவியால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. காந்தியின் பங்களிப்பு, நன்முயற்சிகள் குறித்த வாத பிரதிவாதங்கள் அதில் முன் எடுக்கப்பட்டுள்ளன.

பிப்ரவரி 17 அன்று மத்திய சட்டமன்றத்தில் பகத்ராம்பூரி, கபீருதீன், கயா பிரசாத் சிங் ஆயுள்தண்டனையாக மாற்றக் கோரினார். அரசுதரப்பில் பதில் சொல்லவேண்டிய ஜேம்ஸ் கிரேமர் ஆயுதம் தாங்கிய புரட்சியில் ஈடுபடுபவரிடம் அரசாங்கம் சமரசம் செய்யாது என்ற நிலைப்பாட்டை தெரிவித்தார். மார்ச் 17 1931 அன்று நேதாஜி டெல்லி ஆசாத் மைதான் பொதுக்கூட்டம் வாயிலாக ஆயுள்தண்டனையாக மாற்றுவீர் என கோரிக்கை விடுத்தார். மார்ச் 18 அன்று பகத்சிங்கின் கவுன்சில் மற்றும் நண்பராகிய பிரனாத் மேத்தா மூவரும் கருணைமனு போடவேண்டும். உங்களின் நாட்டுப் பணி மேலும் தேவைப்படுகிறது என்ற அறிவுரையை நல்கினார். ராஜ்குருவும் சுக்தேவும் சீறினர். பகத்சிங் நிதானம் தவறாமல் என்ன அப்பீல் என்றார். உங்களின் வீரத்திற்கு துளியும் களங்கம் விளைவிக்காத அப்பீல் ஒன்றை தயாரித்து வருவதாக மேத்தா சொல்லி சென்றார்.

மேத்தா மறுநாள் வந்த்போது நாங்கள் அப்பீல் அனுப்பிவிட்டோம் என்றனர் தோழர்கள். நீங்கள் தரும் இந்த நகல் அவசியமில்லை என்றனர். மேத்தா அதிர்ந்துபோனார்.

மூவரும் எழுதியதில் காணப்பட்ட மிக முக்கிய அம்சம் " இங்கிலாந்தின் அரசரை எதிர்த்து யுத்தம் செய்ததாக குற்றம் சாட்டியுள்ளீர்கள். எங்களை யுத்தக்கைதிகள் போல் நடத்தவேண்டும். எனவே எங்களை தூக்கில் போடுவதற்கு பதிலாக சுட்டுக்கொல்ல உத்தரவிடுங்கள். இதில் பகத்சிங், ராஜ்குரு, சுக்தேவ் என மூவரும் இணைந்து கையெழுத்துட்டிருந்தனர்.

தோழர்கள் மூவரும் தனித்தனி செல்களில் அடைக்கப்பட்டனர். ஒருவரை ஒருவர் கட்டித்தழுவி தங்கள் அறைக்கு அவர்கள் சென்றதாக அனில் வர்மா பதிவு சொல்கிறது. பார்வதி தேவி, சர்தார் கிஷன் சிங் ஆகியோருக்கு மார்ச் 23 1931 அன்றுதான் கடைசி சந்திப்பு என்கிற செய்தி சிறை நிர்வாகம் சார்பில் தரப்படுகிறது.

இர்வின் வைஸ்ராய் பொறுப்பிலிருந்து ஏப்ரலில் விடுவிக்கப்பட இருக்கிறார் என்பதை ஒட்டி விருந்து ஒன்று மார்ச் 22 1931 அன்று வைஸ்ராய் மாளிகையில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இர்வின் விரும்பியிருந்தால் கூட பிரிட்டிஷ் அதிகாரிகளின் அழுத்தத்தால் அவரால் தண்டனை மாற்றம் செய்திருக்க முடியாது என்பதும் பல்வேறு விவாதங்களின் வழியே நமக்கு கிடைக்கும் செய்தியாக இருக்கிறது.

மார்ச் 24 1931 காலை 7 மணிக்கு தூக்கு என்பது தான் முடிவு. மார்ச் 23 அன்று காலையிலிருந்தே சிறைச்சாலை பகுதியில் பொதுமக்கள் வரத்துவங்கினர். மூவர் குடும்பத்தினருக்கும் தங்கள் மகன்களை பார்க்க வாய்ப்பில்லாமல் போனது. மார்ச் 23 1931 இரவு 7.33க்கு மூன்று மாவீரர்களும் தூக்கில் போடப்பட்டனர். அவர்களது உடல்கள் உறவினர்களுடன் ஒப்படைக்கப்படாமல் ஹுசைவாலா எனும் பகுதிக்கு ட்ரக்கில் எடுத்துச் செல்லப்பட்டு எரியூட்டப்பட்டது.

செய்தி அறிந்து திரண்ட பெரோஷ்பூர் மக்களால் கண்டெடுக்கப்பட்ட moratal remains லாகூர் எடுத்துசெல்லப்பட்டு ரவி நதியில் கரைக்கப்பட்டது. ஊர்வலத்தில் லட்சக்கணக்கானவர் பங்கேற்றனர்.

இத்தோழர்களின் தியாகம் இந்திய விடுதலைக் காவியத்தின் முக்கிய அங்கமாகமாறிப்போனது. இன்றளவும் இளைஞர்களின் ஈர்ப்பு மையமாக இத்தோழர்களின் பெயர்கள் விளங்குகின்றன.




ராஜ்குரு தன் 23ஆம் வயதில் மகத்தான் தியாகத்தை செய்தார் . அவரின் தாயார் 1941வரை உயிர்வாழ்ந்தார். சகோதரன் திங்கர் 1998வரை வாழ்ந்தார். திங்கரின் வாரிசுகள் புனேவில் வாழ்ந்து வருகின்றனர். அனில் வர்மாவிடம் அவர்கள் ராஜ்குரு மற்றும் அவர் குடும்பத்தார் பற்றிய நினைவுகளை பகிர்ந்து கொண்டுள்ளனர்.

பகத்சிங் குறித்து சினிமாக்கள் வந்துள்ளன. கேடக் ராஜ்குரு நகரில் ராஜ்குருவின் சிலையை மே 1978ல் வசந்த்ராவ் பட்டீல் முதல்வராக இருந்த காலத்தில் திறந்துவைத்தார். மூவரும் தூக்கிலிடப்பட்ட சிறைப்பகுதியை விற்க முனைந்தபோது ஆரம்பத்தில் எவரும் வாங்கத்துணியவில்லை. இப்போது அப்பகுதி விற்கப்பட்டுவிட்டதாக நேரில் பார்த்துவிட்டு வந்து அனில் வர்மா சொல்கிறார். அருகில் சத்மான் குடியிருப்புபகுதி இருப்பதாகவும் அங்கு இவ்வீரத்தியாகிகளுக்குரிய நினைவு சின்னம் ஏதும் இல்லை என்கிறார்.

இவ்வழக்கு குறித்த முழுமையான ஆவணங்களை தரக்கோரி பாகிஸ்தான் அரசிடம் வேண்டுகோள் வைத்தோம் , ஆனால் ஏதும் தரப்படவில்லை என இந்திய நாடாளுமன்றம் தனது பதிவொன்றை 2002 ஜூலை 26 அன்று செய்துகொண்டது. பகத்சிங்கின் உறவினர் ஜக்மோகன் சிங் பகத்சிங் பயன்படுத்திய 175 புத்தகங்கள் லாகூர் கீழ்கோர்ட் ஒன்றில் பராமரிப்பு ஏதுமின்றி கிடப்பதை தெரிவிக்கிறார்.

பாகிஸ்தான் அரசாங்கம் லாகூரில் சாத்மான் சௌக் பகுதியை பகத்சிங் சௌக் என பெயர் மாற்றி மரியாதை செய்தது. அதேபோல் பகத்சிங் சொந்தக் கிராமத்தை பகத்சிங்புரா எனப் பெயரிட்டது. பாகிஸ்தான் வழக்கறிஞர் இம்ரான் ரசீத் குரோசி சாண்டர்ஸ் வழக்கை மறுவிசாரனைக்கு கொணரவேண்டும், பிரிட்டிஷ் ராணி மன்னிப்புக்கோரவேண்டும் என வழக்கொன்றை தொடுத்த செய்தியை ஹபிங்டன் போஸ்ட், அவுட்லுக் வெளியிட்டன. அனார்கலி போலீஸ்நிலையத்தில் டிசம்பர் 17 ,1928ல் பதிவான எஃப் ஐ ஆர் உருதுவில் இருந்தது. அதைப்பெறுவதற்காக குரோசி கடுமையாக போராடவேண்டியிருந்தது. அதைத்தருவதற்குகூட லஞ்சம் கேட்டார்கள் என்றும் போராடி பெற்றதாகவும் குரோசி சொல்லுகிறார். அந்த எஃப் ஐ ஆரில் பகத்சிங் ராஜ்குரு சுக்தேவ் என மூவர் பற்றி ஏதுமில்லை- இரண்டு அடையாளமில்லாத துப்பாக்கி ஏந்தியவர்கள் என சொல்லப்பட்டுள்ளதாக குரோசி செய்தியாளர்களிடம் தெரிவித்துள்ளார்.

மூவரும் எரியூட்டப்பட்ட இடம் பாகிஸ்தான் பகுதியில் இருந்தது. தொடர் முயற்சியால் 1961ல் இந்திய எல்லைக்குள் கொணரப்பட்டு ஆயிரக்கணக்கானோர் அஞ்சலி செலுத்தி செல்கின்றனர். பஞ்சாப் அரசின் பெரும் முயற்சியால் 1968ல் அவர்களுக்கு உருவச்சிலைகள் திறக்கப்பட்டு நினைவகம் உருவானது. பகத்சிங்கின் தாயார் வித்யாவதி முதலில் பூ தூவி அஞ்சலி செய்தது நெகிழ்வான தருணமானது. வித்யாவதி 1975 ஜூனில் மறைந்தார். அவரது விருப்பப்படி அவரது மகன்களுடன் அதே இடத்தில் அவருக்கான இறுதி நிகழ்வும் நடந்தேறியது.

ஜூலை 1928ல் நடந்த ஹிந்துஸ்தான் ரிபப்ளிகன் அசோசியேஷன் கூட்டத்தில் பகத்சிங் சோசலிச கோட்பாடுகளை அமைப்பு முன்னெடுக்கவேண்டும் என வற்புறுத்தினார் என சர்தார் பகத்சிங் புத்தகம் எழுதிய ஜே என் சன்யால் தெரிவிக்கிறார் அமைப்பின் பெயரும் ஹிந்துஸ்தான் சோசலிஸ்ட் ரிபப்ளிகன் அசோசியேஷன் என பகத்சிங் வற்புறுத்தலால் பெயர் மாற்றமும் பெற்றதாக சன்யால் தெரிவிக்கிறார். ஹிந்துஸ்தான், பாரத் என்கிற பதங்களை ஏன் அவர்கள் பயன்படுத்தினார்கள் என்கிற விவாதம்கூட தேவைப்படுகிறது. முன்பே 1885ல் தோன்றிய காங்கிரஸ் ஹிந்துஸ்தான் காங்கிரஸ் என வரவில்லை. 1920ல் தோன்றிய தொழிற்சங்க காங்கிரஸ் ஹிந்துஸ்தான்

தொழிற்சங்க காங்கிரஸ் எனப் பெயரிடப்படவில்லை. இதையெல்லாம் அறியாதவர்களா பகத்சிங் உள்ளிட்ட இத்தோழர்கள் என்கிற கேள்வி எழுகிறது.

அஜாய்கோஷ் பகத்சிங் பற்றிய நினைவுக்கட்டுரை ஒன்றை எழுதியிருந்தார். 1923 முதல் இருவருக்கும் பழக்கம் இருந்தது. அப்போது அவர்கள் 15 வயது இளைஞர்கள். பகத்சிங்கை அறிந்தது குறித்தும் பின் அவர் வளர்ந்து கட்டுமஸ்தான உடல்பாங்குடன் 1928ல் தன்னை சந்திதது பற்றியும் அஜாய் தெரிவிக்கிறார். ஆசாத்தும் உடன் வந்ததை குறிப்பிட்டு கட்சி பெயர் மாற்றம் அடைந்ததை அவர்கள் தெரிவித்தனர் என்கிறார். தோழர் அனில் ரஜிம்வாலே அஜாய்கோஷ் குறித்த கட்டுரை ஒன்றில் பகத்சிங்குடன் அசோசியேட் ஆக மட்டுமில்லாது அவருக்கு ஆசானாகவும் அஜாய் இருந்ததாகவும் தெரிவித்திருந்தார்.

அஜாய் பகத்சிங்குடன் பல கம்யூனிஸ்ட் தலைவர்களை சந்தித்ததாக குறிப்பிடுகிறார். எவரையெல்லாம் சந்தித்தனர் என்பது அவரது குறிப்பில் இடம் பெறவில்லை. அதே நேரத்தில் கம்யூனிஸ்ட்கள் மக்கள் போராட்டங்களை நடத்தட்டும், எச் எஸ் ஆர் ஏ அதன் ஆயுதப்பிரிவாக இருக்கட்டும் என்பது ஏற்கப்படவில்லை என்பதையும் தனிநபர் பயங்கரவாதத்தில் நம்பிக்கை இல்லை என கம்யூனிஸ்ட்கள் தெரிவித்தனர் என்கிற செய்தியையும் அஜாய் தருகிறார். கம்யூனிஸ்ட்கள் புரட்சிக்காரர்களாக இல்லை என்ற எண்ணமும் தங்களுக்கு அப்போது இருந்தது எனவும் அஜாய் குறிப்பிடுகிறார். பகத்சிங் மார்க்சிஸ்ட்டாக மாறியிருந்தார் என சொல்வது சற்று மிகையானதாக இருந்தாலும் அவருக்கு சோவியத் மீது பற்று அதிகமாக இருந்தது என்று அஜாய் பதிவு சொல்கிறது.

It would be an exaggeration to say that he became a Marxist, but more and more as a result of his studies, of discussions which we held frequently and under the impact of events outside–stirring events took place while we were in prison: ...Studies in prison deepened the love that we already cherished for the Soviet Union and on the occasion of the 1930 anniversary of the November Revolution, we sent greetings to the Soviet Union, hailing its victories and pledging support to the Soviet State against all enemies... என விளக்கியுள்ளார் அஜாய்.

தோழர்கள் பஞ்சாப் கவர்னருக்கு எழுதிய நீண்ட கடிதத்தில் கீழ்கண்ட வரிகளும் இடம் பெற்றிருந்தது. .. Choose which ever you like but that war shall be incessantly waged without taking into consideration the petty and meaningless ethical ideologies. It shall be waged ever with new vigour, greater audacity and unflinching determination till the Socialist Republic is established and the present social order is completely replaced by a new social order based on social prosperity.. In the very near future, the final battle shall be fought and final settlement arrived at." march 20 1931 இக்கடிதத்தில்தான் மூவரும் கையெழுத்திட்டிருந்தனர்.

பகத்சிங்- சுக்தேவ் ஆகிய தோழர்களுடன் வாழ்ந்த 3 ஆண்டுகள் தன் வாழ்நாளில் மிக உயரிய தருணங்கள் என ராஜ்குரு குறிப்பிட்டார். என் 19 ஆண்டுகால வாழ்க்கையில் நரகவேதனையை அனுபவித்த நாட்கள் உண்டு. ஆனால் உங்களை எல்லாம் சந்தித்த பின்னர் வாழ்வின் அர்த்தம் எனக்கு புலப்பட்டது என்று மகிழ்ந்து சொன்னவர் ராஜ்குரு..

Ref:

RajGuru- The invincible Revoultionary by Anil Verma

Sardar Bhagat Singh- J N Sanyal Bhagat Singh as I knew Him- Ajoy Ghosh




ஆசிரியரின் பிற நூல்கள்

1. மார்க்சியத் தடங்கள்
2. ரோசாலக்ஸம்பர்க்
3. போராளிகளின் குரல்
4. பகவத்கீதை பன்முகக் குரல்கள்
5. Trade Justice in Telecom
6. Selected Ideas of O.P Gupta
7. ஹெகல் துவங்கி..
8. கார்க்கியின் அரசியல்வெளி
9. நவீன சிந்தனையின் இந்தியப் பன்முகங்கள்
10. காந்தியைக் கண்டுணர்தல்

## சிறு வெளியீடுகள்

1. ஷியாம்ஜி கிருஷ்ண வர்மா
2. சிகாகோ மேதின தியாகிகள்
3. பகுனின் போராட்ட வாழ்வும் அனார்க்கிசமும்
4. விடுதலைக்கு முன்னர் எம் என் ராய்
5. பிரடரிக் எங்கெல்ஸ் நட்பின் சிகரம்
6. நேதாஜி சுபாஷ் கம்யூனிஸ்ட்கள் உறவும் உரசலும்

www.pattabiwrites.in